

காணா லுறுகின்றேன் கல்லருவி முத்துதிர
ஓணா விழவி லொலியதிர — பேணி
வருவேங் கடவா என்னுள்ளம் புகுந்தாய்
திருவேங் கடமதனைச் சென்று

*ஒலிக்கின்ற அருவிகளின் மூலமாக முத்துக்கள் உதிரப் பெற்றதாய் திருவோணத் திருநாளில் திருப்பல்லாண்டு பாடுகை, வேத பாராயணம் செய்கை, ஆடுகை, பாடுகை முதலானவற்றாலுண்டான ஒலி அதிரப் பெற்றதாய் பக்தர்கள் விரும்பி வந்து சேரப் பெற்றதான திருவேங்கடமலையை இருப்பிடமாகவுடையவனே! நீ என் நெஞ்சில் புகுந்து விட்டாய். நீ திருமலையை விட்டு என்னுள்ளத்திலே வந்து விட்டாலும் நான் அத்திருமலையிற் சென்று ஸேவிக்க விருப்பங் கொண்டிருக்கிறேன்:*

*— நான்முகன் திருவந்தாதி-திருமழிசையாழ்வார்-41.*

ஜூன்; 1985

# ஸப்தகிரி

இதழ். 1 மலர் 16

தனிப்பிரதி ரூ. 1 வருடச் சந்தா ரூ. 12

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

| | | |
|---|---|---|
| அட்டையில் | : | ஸப்தகிரி தனது 16-வது ஆண்டில் அடியெடுத்து வைக்கும் விளக்கச் சித்திரம். சித்திரம்-கே. ஜெகதீஷ். |
| 2-வது | : | திருமலையில் பாரத துணைக் குடியரசுத் தலைவர் திரு. ஆர். வெங்கட்ராமன் அவர்கள். |
| 3-வது | : | ஸ்ரீ மலையாள ஸ்வாமிகளின் திருவுருவச் சிலை. வியாஸாஸ்ரமம்-ஏற்பேடு. (ஆ. மா). |
| பின்னட்டையில் | : | நாராயணவனம் ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில் கருட சேவை. |

*சிறப்பாசிரியர் :*
திரு. எஸ். லக்ஷ்மிநாராயணா
I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*அச்சிடுபவர்:*
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி

*ஆசிரியர் :*
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

*துணையாசிரியர்:*
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு :
THE WELFARE OFFICER
Publication Section, T.T.D
K. T. Road;
TIRUPATI.

# உங்களுடன்....

மனித வாழ்க்கை என்பது ஓர் ஓட்டப்பந்தயம் போன்றது என்பர் சிலர். ஓட்டப்பந்தயத்தின் போது ஒருவனுக்குத் தேவை வேகம், துடிப்பு, இலட்சியம் ஆரோக்யம் போன்றன. இவையே வாழ்க்கைக்கும் இன்றியமையாதனவாக விளங்குகின்றன. ஓட்டப்பந்தயத்தில் பங்கு பெறும் ஒருவன், தான் ஓடும்போது எவ்வளவு தூரம் நாம் கடந்து வந்துள்ளோம் என்று பார்க்கத் திரும்பித் திரும்பிப் பார்த்தானேயாகில், பந்தயத்தில் முதலில் வரும் அவன், முடிவில் பலரை பின் தொடர்ந்து. ஓட வேண்டிய நிலையில் இருப்பான். ஆனால் வாழ்க்கைப் பந்தயத்தில்? வாழ்க்கையில் முன்னேற முன்னேற கடந்து சென்ற அனுபவங்களை அவன் அசைப் போட்டுத்தான் பார்க்க வேண்டும். அப்போதுதான் அவன் கடக்க உள்ள பாதை நன்கு செப்பனிட்டதாக அமையும். குற்றங்குறைகளைக் களைந்து கொள்ள, லட்சியத்தை உயர்த்திக் கொள்ள, வாழ்க்கையை உன்னதமாக்கிக் கொள்ள அவன் கடந்து சென்ற வாழ்க்கை அனுபவங்களே அவனுக்கு உறுதுணையாக அமையும். இது மனித வாழ்வின் எல்லா கூறுகளுக்கும் பொருந்தும்; அவ்வழியில் நாமும் நமது 'ஸப்தகிரி' பத்திரிகையினை எண்ணிப்பார்த்திடல் அவசியமாகும்.

அரசியலுக்கும், சினிமாவுக்கும், உடைகளுக்கும் தன் நேரத்தை செலவிட்ட பிறகே தன் வயிற்றைப் பார்க்கும் நிலையில் இன்றைய சராசரி இந்து மதத்தவன் இருக்கின்றபோது, சமயத்தில் அவன் கொண்டுள்ள ஈடுபாட்டினைப்பற்றி என்னென்று கூறுவது! பொது சமய விழாக்களின்போதும், கோயில் நிகழ்ச்சிகளின் போதும் மக்கள் கூடும்போது அவற்றை பொழுது போக்குவதற்கான வாய்ப்புக்களாகவே அவன் கருதுகின்றான். பிற மதத்தவர்கள் இறை வழிபாட்டிற்கென ஒரு குறிப்பிட்ட நேரத்தையோ, குறிப்பிட்ட நாளையோ ஒதுக்கிடும்போது, இந்துக்களுக்கு எல்லா நேரங்களும், எல்லா நாட்களும் இறை வழிபாட்டிற்குரியனவேயாம் என்று கூறிக்கொள்கின்றோமே தவிர, உண்மையில் எதிர்பாராது தான் ஒரு கோயிலைக் கடந்திடும் போது அவனையுமறியாமல் தன் கன்னங்களில் போட்டுக் கொள்வதால் மட்டுமே அவனுடைய இறை வழிபாடு முடிந்துவிட்டதாக நினைத்துக் கொள்கிறான். சமய விழாக்களையும் சமயப் பண்டிகைகளையும் எதற்குக் கொண்டாடினார்கள், ஏன் கொண்டாட வேண்டும் என்று சிந்திக்க மறந்து அவற்றை உண்டு மகிழவே என்று கருதிக் கொள்கிறோம். இதுவே இன்றைய இந்துக்களிடையே எழுந்துள்ள சமய எழுச்சியாகும்!

இந்நிலையில் உண்டு உறங்கி விழித்த நேரத்தில் அவனுள் அறிவுப்பசி எழுந்திடும்போது, அவன் பார்வையில் படுவன புத்தகங்களும், பத்திரிகைகளும்தான். அவனுக்குக் கிடைக்கும் சில மணிநேர கால இடைவெளிகளுக்குள் அவன் புத்தகங்களைவிட பத்திரிகைகளையே அதிகம் நாடுகின்றான். இந்த சில மணி நேரங்களே அவனைச் சிந்திக்கச் செய்யவும் சிரமிக்கவும் வழி கோலுகின்றன. இது ஒரு யதார்த்தமான உண்மை. ஆம் மனிதனை சிந்திக்கத் தூண்டும் வாய்ப்புக்கள் மாபெரும் நிகழ்ச்சிகளாக அமைய வேண்டியதில்லை. ஒரு சில கண நேர நிகழ்ச்சிகளும், சிறு செய்திகளுமே போதுமானது. அவற்றினால் அவனது மனமும், அறிவும் பெரிதும் பாதிக்கப் படுகின்றன. இவ்வகையில் பத்திரிகைகளின் பங்கு பெரிதும், வாழ்க்கையில் இடம் பெறுகின்றது. பெரும்பான்மையான பத்திரிகைகளுக்கு ஜீவநாடியாக விளங்குவன, நேர்மையற்ற அரசியலும் ஆபாசக் காட்சிகளும் கொண்ட திரைப்படங்களும்தான்.

இந்நிலையில் ஸப்தகிரி பத்தி...கையின் பங்கு எவ்விதத்தில் உள்ளது என்பதையும், எவ்வாறு அமைய வேண்டும் என்பதையும் நாம் சற்றே எண்ணிப்பார்த்தோமேயானால், அது ஸப்தகிரியின் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவும். பல ஆண்டுகளுக்கு முன்னால் தி. தி. தேவஸ்தான குடும்ப இதழாக வெளிக் கொணரப்பட்டு, பின்னர் சில சமயக் கட்டுரைகளைக் கொண்ட ஒரு சமய இதழாக தொடரப்பட்டு 1970-ம் ஆண்டு முதற்கொண்டு 'ஸப்தகிரி' எனும் பெயரில் ஒரு முழு சமய இதழாக வெளி வந்து கொண்டிருக்கின்றது. ஆரம்பத்தில் ஐந்தாறு எழுத்தாளர்களின் கட்டுரைகளைக் கொண்டு, குறைந்த பக்கங்களுடன் வெளி வந்த இப்பத்திரிகை, தற்போது பதினைந்துக்கும் மேற்பட்ட எழுத்தாளர் பெரு மக்களின் படைப்புகளைக் கொண்டு, வாசகர்களையே எழுத்தாளர் பதவிக்கு உயர்த்தி, பத்திரிகை உலகில் தனக்கென ஒரு தனி இடத்தை ஸப்தகிரி பெற்றுள்ளது. சமய பாகுபாடின்றி, ஏன் இஸ்லாமியரும், கிறிஸ்துவரும் விரும்பி வரும் சிறப்புடையது திருமலை; அத்தகு பெருமை உடையவன் அத்திருமலையான். அவனருளால் வெளிவந்து கொண்டிருக்கும ஸப்தகிரியும் பிற சமயங்களைத் தாக்கியோ, ஒன்றை உயர்த்த மற்றொன்றினைத் தாழ்த்தியோ என்றுமே விஷயங்களை வெளியிட்டதில்லை. வேத உபநிஷத்துக்களின் பொருள் விரிவே இதிஹாஸங்களும், புராணங்களும். அவை என்றுமே சமயக் காழ்ப்புணர்ச்சியைத் தூண்டியதில்லை. தூண்டும் விதத்தில் கருத்துக்களைக் கொண்டவையும அல்ல. அவற்றை அடிப்படையாகக் கொண்டுதான் சமய கதை கட்டுரைகள் இயற்றிட முடியும். ஒரு வேளை மாறுப்பட்ட கருத்துக்களாக சில தோன்றினாலும் அவையாவும் 'நஹி நிந்தா நியாயம்' எனும் விளக்கத்தில்தான் அமைந்துள்ளன. பிற்போக்கு வாதிகளுக்கும், சமய வெறியர்களுக்கும் என்றுமே ஸப்தகிரி ஆதரவு தந்ததில்லை. ஒரு வேளை சில பல கருத்துக்கள் சிலருடைய மனதை பெரிதும் புண்படுத்தியிருந்தால் அதற்காக மன்னிக்க வேண்டுகிறோம். அவர்களுடைய மறுப்புக் கருத்துக்களும ஸப்தகிரியில் வெளியிடப்பட்டு அவர்களுடைய மற்றும் வாசகர்களின் கருத்துக்களும் ஸப்தகிரியின் ஆக்கப் பூர்வமான வளர்ச்சிக்குப் பயன்படுத்தப்படும்.

ஆண்டாண்டு தன் பிரதிகளின் விற்பனை எண்ணிக்கையினைச் சிறுகச் சிறுகப் பெருக்கிக் கொண்டு வரும் ஸப்தகிரி சில சமயங்களில் காலம் தாழ்ந்து வெளி வந்தாலும் தொடர்ந்து பத்திரிகைக்கு ஊக்கம் அளித்து கொண்டு வரும் வாசகர் பெரு மக்களுக்கும், விற்பனைப் பிரதிநிதிகளுக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொண்டு, தரமான சமய கதை கட்டுரைக... னுப்பித் தங்களையும் வளர்த்துக் கொண்டு பத்திரிகையின் மதிப்பினையும் உயர்த்த வேண்டும் என்று எழுத்தாளர்க... டுக் கொண்டு, தன்னுடைய 16வது புத்தாண்டில் அடியெடுத்து வைக்கும் ஸப்தகிரி சமயத்தொண்டில் ... லும் சிறந்தோங்கிட அம்மலர்மகள் மணாளனின் திருவடிகளைத் தொழுதேத்துகின்றோம்.

# ஸ்ரீ அஷ்டபுஜத்தான்



ஸ்ரீபுஷ்பவல்லி தாயார் ★ ஸ்ரீ அஷ்டபுஜநரசிம்மஸ்வாமி

வைணவர்களுக்கு 108 திருப்பதிகள் முக்கியமெனப் ஆழ்வாராதிகளும் ஆசாரியர்களும், அருளி இருக்கிறார்கள். அதில் கோவில், திருமலை, பெருமாள் கோவில் (காஞ்சிபுரம்) மிகவும் முக்கியமானதாகும். "நகரேஷு காஞ்சி" என்றும்,

"நின்றான் இருந்தான் கிடந்தான்
இதுவன்றோ
மன்றார் மதிற்கச்சி மாண்பு"

என்றும்புகழப்பட்டகாஞ்சியில்உள்ள 108 வைணவ திவ்ய க்ஷேத்திரத்தில் சேர்ந்த ஒன்று ஸ்ரீஅஷ்டபுஜம் கோயில். இஃது திருமங்கையாழ்வாராலும், பேயாழ்வாராலும் பாடப் பெற்ற பெருமையுடைத்தது. "வேதம் உரை செய்து கோபுரம் இடிகண்ட" நிகமாந்த தேசிகனாராலும் மங்களாசாஸனம் செய்த புகழுடைத்தது. இவர் "அஷ்ட புஜாஷ்டகம்" என்னும் ஸ்தோத்திரத்தால் மங்களாசாஸனம் செய்து உள்ளார்.

"தொட்டை படை எட்டும் தோலாத
வென்றியான்
அட்டபுயகரத்தான் அஞ்ஞான்று"

என்று பேயாழ்வாரும்,

"கலைகளும் வேதமும் நீதிநூலும்
கற்பகம் சொற் பொருள்தானும்,
மற்றை
நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும்
நீர்மையினாலருள் செய்து, நீண்ட
மலைகளும் மாமணியும் மலர்மேல்
மங்கையும் சங்கமும் தங்குகின்ற
அலைகடல் போன்றிவரார்
கொலென்ன
அட்ட புயகரத்தே னென்றாரே"

என்று திருமங்கை ஆழ்வாரும் பாடியுள்ளார்கள்.

மேலும் இவர் ஸ்ரீ அஷ்டபுஜப் பெருமாளை அஷ்டபுஜ நரசிம்மராக நினைந்து உருகி,

"திருபுர மூன்றெரிந்தானுமற்றை
மலர்மிசை மேலயனும் வியப்ப
முரிதிரை மாகடல் போல் முழங்கி
மூவுலகும் முறையால் வணங்க
எரியன கேசரவாளெயிற்றொடிரணி
யனுக மிரண்டு கூறு
அரியுரு வாமிவரார் கொல்? என்ன
அட்டபுயகரத்தே னென்றாரே"

என்கின்றார்.

சக்ரகோடி விமானம், கஜேந்திர புஷ்கரணி சிறப்பானது. கஜேந்திர ஆழ்வாருக்கு மோட்சத்தை அளித்தவர்.

இங்கு பரமபத வாசல் மிகவும் பிரசித்தி வாய்ந்த ஒன்றாகும். வைகுண்ட ஏகாதசிக்கு இந்த வாசலில் எழுந்தருளி சேவை சாதிக்கிறார். தேவர்கள் செய்த யாகத்தை இரக்ஷிக்க எட்டு திருக்கரங்களில் எட்டு திவ்ய ஆயுதங்களை ஏந்தி அதாவது, "வலப்புறம் உள்ள நான்கு திருக்கரங்களில் சக்ரம், கத்தி, தாமரை புஷ்பம், அம்பு ஆகிய நான்கினையும் இடது புறம் உள்ள நான்கு திருக்கரங்களில் சங்கம், வில்லு, கேடயம், கதை ஆகிய நான்கினையும் தரித்துள்ளார். நின்ற திருக்கோலம். மேற்கே திருமுகம். இவர் திருவுருவைக்கண்ட ஸ்ரீமந்நிகமாந்த தேசிகர் "பக்தர்களை விரைவில் இரக்ஷிக்கும் நோக்கத்துடன், பகவான் தன் கைகளை இருமடங்கு எண்ணிக்கையுள்ளதாகக் கொண்டு எழுந்தருளியுள்ளார்" என்கின்றார்.

பால் நினைந்து ஊட்டும் தாயாய் மென்மையே பெண்மைக்கு அணியாகக் கொண்டு எழுந்தருளி இருக்கும் தாயாரின் திருநாமமோ புஷ்பவல்லித் தாயாராகும். அஷ்டபுஜத்தான் குறிக்கோளை மனதிற் கொண்டு வரம் கேட்கும் பக்தர்களுக்கு விரைந்து வரமளிப்பவள். மேலும் வராகப்பெருமாள் தாயாரை மடியில் வைத்துக் கொண்டு சேவை சாதிக்கிறார்கள். பெருமாளின் திருநட்சத்திரம் சித்திரைத் திங்களில் ரோகிணியாகும். ஆடி மாதம் அஸ்த நட்சத்திரத்தில் கஜேந்திர மோட்சமாகும். தைமாதம் ரோகிணி முடிய 10 நாட்கள் திருவத்யாயன உத்ஸவம். இந்த சந்நிதி பாஞ்சராத்திர முறைப்படி திருவாராதனம் செய்யப்படுகிறது.

---

திரு. எஸ். லக்ஷ்மிநாராயணன்,
விஜயவாடா.

---

மூலவருக்கு முன்பே உத்ஸவர் ஸ்ரீதேவி,பூதேவிகளோடு சங்கு சக்ரதாரியாய் ஏன்னியுள்ளார். இந்த உத்ஸவருக்கு பக்கத்தில் கஜேந்திர வரதன் உத்ஸவமூர்த்தியாகக் கருடவாகனத்தின் மீது எழுந்தருளி கஜேந்திரனுக்கு அன்று பிரத்யட்சமாய் சேவை தந்தது போல் இன்றளவும் ஸேவை தருகிறார். இந்த சந்நிதியை பல்லவர்கள் திருப்பணி செய்து இருப்பதாக அறிகிறோம்.

தாயாருக்கு பிரதி வெள்ளிக்கிழமை உத்ஸவமும் ஊஞ்சலும் நடைபெறுகிறது. நவராத்திரியில் லட்சார்ச்சனை நடந்து வந்தது. ஸ்ரீபெருமாளுக்கு சுமார் ஐந்து வருடம் தெப்ப உற்சவம் விமரிசையாக நடந்து வந்தது.

இங்குத் தாயாரும் பெருமாளும் மிகவும் வரபிரசாதி. இந்த அழகிய திவ்ய க்ஷேத்திரத்தைப் பக்தகோடிகள் அனைவரும் சேவித்து உஜ்ஜீவிக்க வேணும் என பிரார்த்திக்கிறேன்.

卐

# ஆன்மீகமும் கவிதையும்

மேலை நாட்டில், ஆன்மீகவியல் என்பது பெரும்பாலும் இறையியல் (Theology) எனப்படுவதனுடன் ஒப்பிட்டுக் கூறத்தக்கது. இந்திய நாட்டின் சமயமானது கலைகள், விஞ்ஞானம் ஆகியவற்றின்மேல் அதிகமாகக் கட்டுப்பாடுகளை விதிக்காமல், எல்லாவற்றுக்கும் வளைந்து கொடுத்து வந்தது; எனவே பழங் காலக் கவிஞர்கள் சுதந்திரமாகத் தன் ஆன்மீக நோக்கை நிலைநாட்ட முடிந்தது; ஆனால் பிற்காலத்தில் சடங்குகள், கட்டுப்பாடுகள் அதிகமாயின. மேலை நாட்டிலோ சமயமானது முன்பு கலை, விஞ்ஞானத்தைத் தன் கட்டுக்குள் வைத்திருந்தது. கலிலியோ, கோபர்நிகஸ் போன்ற விஞ்ஞானிகள் பட்டபாடு எல்லோரும் அறிந்ததே. விஞ்ஞானத்தைப் போலன்றிக் கலை நேரிடையாக விஷயத்தை உணர்த்த வேண்டிய அவசியமின்மையால் கொஞ்சம் சுதந்திரம் பெற்றிருந்தது; ஆனால் பிற்காலத்தில் அங்கு கலை, விஞ்ஞானம் ஆகியவைகள் சமயங்களை விட்டு விலகித் தனித்து ஓங்கின; எனவே சிறப்பான தனித் தன்மைகளை அவை பெற்றிருந்தன. இக்காலத்தில், தம் பழம்பெருமை மங்கியிருந்த இந்தியக் கலைஞர்களும், விஞ்ஞானிகளும் மேற்கத்தியத்தினுடைய வளர்ச்சிகளின் பாதிப்பால், இன்றைய நவீனத்துவத்தைத் தம்பால் மறுமலர்ச்சி செய்து கொண்டனர்.

மேற்கில் இன்று இறையியல் இரு பிரிவுகளாக விளங்குகிறது. சமயம் சார்ந்தது (Religious Theology), தனி மனிதனைச் சார்ந்தது (Personal Theology) என்பவைகளே அவைகள். இவ்விரு வகைகளிலும் இயங்கும் இலக்கியத்தில் தனிமனித இறையியலைச் சார்ந்த இலக்கியமே மிகுந்த அளவில் சுயத்துவமும், தனித்துவமும் பெற்றுக் காணப்படுகிறது. ஹோமர், தாந்தே, கதே, வால்மீகி, கம்பன், கபீர்தாஸ், வேமனு போன்ற புகழ் மிக்க கவிஞர்கள் இரண்டறக் கலந்த முற்கால இறையியலைப் பிரதிபலிப்பவர்கள்.

தனிமனித இறையியலைச் சார்ந்திருப்பவர்களையும் அத்யாத்மிக கவிஞர்கள் (Metaphysical Poets), யோகித்வ கவிஞர்கள் (Mystic Poets) என்று இருவகைப் படுத்துவார்கள். முதல்வகைக்கு வில்லியம் பிளேக், ஜான் டான்னி, ராபர்ட் பிரௌனிங், தாகூர், பாரதி ஆகியவர்களையும்; இரண்டாம் வகைக்கு யீட்ஸ் போன்றோர்களையும் சிறந்த உதாரணங்களாகக் குறிப்பிடலாம்; அத்யாத்மிக கவிகள் அதிகபட்ச ஆன்மீகப் பொருளைத் தொடுபவர்கள் என்றும், யோகித்வ கவிகள் அதிகபட்ச அபூர்வமான விஷயங்களைக் கையாளுபவர்கள் என்றும் விளக்குகின்றார் சி. சு. செல்லப்பா என்ற திறனாய்வாளர். மேலும் தமிழ் இலக்கியத்திலுள்ள ஆன்மீகக் கவிஞர்களை வேதாந்தக் கவிகள் ஞானத்தை அடிப்படையாகக் கொண்டவர்கள். பக்திக் கவிகள் கடவுளைப் பாடுபவர்கள்; சித்தர்கள் அறிவுப் பூர்வமான கூடமான பொருள்களை எடுத்துக் கொள்பவர்கள். எனவே சித்தர்களை யோகித்வக் கவிகளோடும், வேதாந்த தத்துவக் கவிகளை அத்யாத்மிக கவிகளோடும் இனம் சேர்க்கிறார் சி. சு. செல்லப்பா.

சங்க இலக்கியத்தில் ஐந்து நிலப் பாகுபாட்டையும், அந்நிலத்துக்குரிய ஐந்து வகைக் கடவுள்களையும் காணலாம். சங்க இலக்கியம் இயற்கையோடு இயைந்த வாழ்க்கையை அகம், புறம் என்ற இரு பிரிவுகளில் வைத்து காதலையும் வீரத்தையும் பாடுவதாகப் பெரும்பாலும் அமைந்திருக்கிறது. பரிபாடலில் மட்டும் இறை வழிபாடு அதிகம் காணப்படுகிறது; சங்கம் மருவிய காலத்தில் சிலப்பதிகாரமும் மணிமேகலையும் சமய, தத்துவ ஆன்மீக நோக்கங்களை அதிகம் வலியுறுத்தின. தர்க்க வாதத் திறமையுடன் பிற சமயங்களை மறுத்துப் பௌத்தத்தை நிலைநாட்டும் சாத்தனாரை விட, எல்லா மதத்தையும் சம அளவில் கண்டு பாராட்டிச் செல்லும் இளங்கோவடிகள் சிறந்த ஆன்மீகக் கவி ஆகின்றார்.

திரு. கே. சுப்ரமணியன்
எம்.ஏ., எம்.பில்.,
நகலூர்

சங்க காலப் புலவர்கள் எல்லா விதமான வாழ்க்கை முறைகளையும் மேற்கொண்டிருந்தவர்கள். அதற்குப் பின் எழுந்த நீதிக் காலத்தில் பௌத்த, சமண கிறிஸ்தவத் துறவிகள் இலக்கியத்தில் பெரும்பங்கை வகித்தனர். கவித்துவம் மறைந்த பிரச்சாரம் மலிந்தன. திருக்குறள் உயர்ந்த நோக்கில் அறம், பொருள், இன்பம் பற்றிய மனித வாழ்க்கையின் ஆன்மீகத் தேடலை நெறிப்படுத்தியது எனலாம்.

பக்தி இயக்க காலத்தில் சமயக் கவிஞர்களின் ஆதிக்கம் பிறந்தது. மற்ற சமயங்களின் குரல் மங்கி, சைவ வைணவ இலக்கியங்கள் பெரிதாகப் பாராட்டப்பட்டன. சமயப்

போராட்டங்களும் நிகழ்ந்தன. தேவாரம் முதலிய பன்னிரு திரு மறைகளும், நாலாயிர திவ்ய பிரபந்தமும் ஆன்மீக நோக்கிலான பக்தி உணர்வைப் போற்றி வளர்த்தன. அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர், காரைக்காலம்மையார் போன்ற நாயன்மார்களும்; நம்மாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கை ஆழ்வார், குலசேகராழ்வார் போன்ற ஆழ்வார்களும் பக்திச் சுவை தனி சொட்டச் சொட்டப் பாடிய சிறந்த ஆன்மீகக் கவிஞர்களாவார்கள். இவர்கள் சமயம் சார்ந்தவைகளைப் பாடினுலும், இலக்கியத் தரமும் ஆன்மீக லட்சியமும் அவற்றில் விரவிக் கிடக்கின்றன.

பக்திகால இலக்கியத்தில் கம்ப ராமாயணத்தைச் சிறப்பாகக் குறிப்பிட வேண்டும். இந்திய இதிகாசத்தைத் தகுந்த காலத்தில், மிகுந்த கவித் திறமையுடன் கம்பர் படைத்தளித்தார். சிற்றிலக்கிய காலங்களில் கவிஞர்கள் சிற்றரசர்களையும், சிருங்கார ரசத்தையும் மிகுதியாகப் பாட ஆரம்பித்து விட்டனர். இலக்கண கட்டுப்பாடுகள் மிகுந்து, தம் பாண்டித்யத்தைக் காட்டுவதே நோக்கமாகச் சொற்சிலம்பமாடி, தம்மை ஆதரிப்பவர்களை மகிழ்விப்பதே கொள்கையாயின. திரிகூடராசப்பர், காளமேகம் போன்றோர் இவர்களில் மாறுபாடான தன்மையுள்ளவர்கள்.

இடைக்காலத்தில் எழுந்த ஆன்மீகக் கவிகளில் சித்தர்கள் குறிப்பிடத் தகுந்தவர்கள். கவித்திறனும், ஆன்மீக நோக்கும் இவர்களிடமே உன்னதமாக வெளிப்படுகின்றன. எளிய மக்களின் பிரதிநிதிகளாக, சாத்திர சம்பிரதாயங்களை மதியாதவர்களாக, மனதின் உயர் நிலையான ஆன்மீகத்தை வெளிப்படுத்தும் நோக்கமுள்ளவர்களாக இவர்கள் விளங்குகிறார்கள். பொருள் முதல் வாதிகள், பொதுவுடமைவாதிகள்



## திருத்துழாயின் பெருமைகள்

1. துளசி இலை வாடிச்சருகானாலும் கங்கை நீர் போன்று புனிதமான தாம்.

2. பௌமவாரம், சுக்ரவாரம், மன்வாதிகள், யுகாதிப்பண்டிகை, பிற்பகல், சங்கரணமப் புண்ய காலம், பிரதோஷம், அமாவாசை, பௌர்ணமி, துவாதசி, அர்த்த ராத்திரி, சந்திகாலங்களில் துளசிப் பத்திரத்தைப் பறித்தால், விஷ்ணுவின் சிரசைக் கொய்ததற்கு ஒப்பாகும்.

3. அசிங்கமான வார்த்தைகள் பேசியவனும், உண்ணக்கூடாத பொருட்களை உட்கொண்டவனும், மனந்திருந்தி விஷ்ணுவின் ஆலயம் சென்று, துளசி தீர்த்தம் உட்கொண்டால் புனிதமடைகிறான்.

4. 'துளசி பத்திரத்தைக் கையில் எடுத்துக்கொண்டு, என் பக்தன் எங்கு சென்றாலும், நான் அவனைப் பின் தொடர்வேன். இது எப்படியெனில், பசு தன் கன்றைத் தொடர்ந்து செல்வது போலாகும்'' என்று பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் அருளியுள்ளார்.

5. துளசியைப் பழிப்பவனும், துளசிச் செடியைக் காலால் மிதிப்பவனும் விஷ்ணுவின் சினத்திற்கு ஆளாகின்றான்.

6. தேவாலய நந்தவனங்களில் துளசிச் செடியையோ வில்வ மரத்தையோ வைத்து, தினசரி நீர்வார்ப்பவன், 'அச்வமேத பலன்' அடைந்து, தேவலோகத்தில் சகல ஐச்வர்யங்களையும் பெறுவான்.

7. திருமணம் ஆகாத கன்னியர், வீட்டில் 'துளசி கல்யாணம்' செய்து அந்தப் பத்திரங்களைக் கோயிலுக்கு அர்ப்பணித்தால், விரைவில் மணந்து சுபிட்சமாக வாழ்வர்.

கூட இவர்களைப் பாராட்டுவர்; ஆனால் உண்மையில் இவர்கள் சொந்தம் பாராட்டுவதுபோல் அல்லாமல், சித்தர்கள் தம் அடிப்படையான விஷயங்களில் கருத்து முதல் வாதத்துக்கே அழுத்தமும், முக்கியத்துவமும் கொடுப்பதைக் கவனிக்க வேண்டும்; அமைப்புகளை, இயக்கங்களை, புறமாறுதல்களை, சர்வாதிகாரங்களை விரும்பாதவர்களாக சித்தர்கள் தென்படுகின்றனர். சிவவாக்கியர், பட்டினத்தார், திருமூலர் முதலிய சித்தர்களையும், அதைத் தொடர்ந்த தாயுமானவரையும் சிறந்த ஆன்மீக வாதிகளாகக் கருதலாம். இராம லிங்க வள்ளலார் சமரச சன்மார்க்க நெறியையும், சித்த நெறியையும் தற்காலத்துக்கும் கொண்டு வந்து இயக்க ரீதியில் பலப்படுத்தினார்.

பின் தோன்றியது பாரதி யுகம். தேச பக்திக் கவிதைகளை இயற்றினாலும், பெரிதும் ஆன்மீகக் கவிதைகளையே சிறப்பாகப் படைத்துள்ளார் அவர். அரவிந்தர், விவேகானந்தர் போன்றோர் இவருக்கு இவ்வகையில் பாதிப்பைச் செலுத்தியுள்ளனர். மரபுக் கவிதையில் இவ்வளவுக்குப் பின்பு ஒரு ஆன்மீகக் கவிஞர் கூட தோன்றவில்லை. மரபான ஆன்மீக வழி இலக்கியத்தின் சாரத்தையும், நவீன இலக்கியத்தின் இயல்புகளை இவர்தான் பூரணமாகப் பெற்று வளர்த்து விட்டார்.

வெளிநாட்டுத் தாக்கம் நவீனத் தமிழ்க் கவிதைக்கு உருவத்திலும், உள்ளடக்கத்திலும் பல புரட்சிகர மாறுதல்களைக் கொண்டு வந்தது. புதிதாகத் தோன்றிய பிற இலக்கிய வகைகளைப் போலில்லாமல், தமிழ்க் கவிதையில் பாரம்பரியத்தின் ஆழம் நிறைந்திருக்கிறது. புதுக்கவிதைக்குத் தூண்டுதலளித்த பாரதியின் வசன கவிதைகள், வேதத்தின் பாதிப்பை அதிகம் பெற்றிருக்கின்றன; இவற்றின் எழுச்சியில் புதுக் கவிதையைத் தமிழில் வேரூன்றிப் படரவிட்ட ந. பிச்சமூர்த்தி, ஆன்மீக நோக்கத்தையே தன் கவித்துவத்தின் முக்கிய தன்மையாகக் கொண்டவர். ஆனால் இவர் கவிதைகள் வைதீக நெறியின் வழிப்பட்டவை என்றே கூற வேண்டும். நவீன ஆன்மீக நோக்கின் பூரணமான தொனி இவரிடம் குறைவாகவே வெளிப்படுகிறது. இவருக்குப் பின்பு வந்த புதுக்கவிதை, பெரிதும் ஜனரஞ்சகத் தனத்தையும், பொதுவுடமைக் கருத்தையும் சார்ந்து இன்று பூதாகாரம் பெற்றுவிட்டது. என்றாலும் இவர்களில் ஆன்மீகத் தேடல் உடையவர்கள், சிறு பத்திரிகைகளின் மூலம் தீவிரமான வாசகர்களின் கிரகிப்பைப் பெற்றுச் சிறந்து விளங்குகின்றனர். தமிழ்ப் புதுக்கவிதைக் கவிஞர்களில் சிறப்பானவர்களை விரல் விட்டு எண்ணிவிடலாம்; அவர்களிலும் ஆன்மீக நோக்கமுடையவர்கள் மிகச் சிலரே. நகுலன் என்னும் சமகாலக் கவிஞரிடம் மேலை நாட்டின் ஆன்மீகத் தத்துவமும், இந்திய வைதிகப் பார்வையும் கலந்த கதம்பப் போக்கு காணப்படுகிறது; எனவே தெளிவின்மை என்ற நிலைக்குச் சென்று அதையே தம் கொள்கையாகவும், உத்தியாகவும் செய்து கொள்கிறார்.

பாரதிக்குப் பின் சிறந்த தமிழ்க் கவிஞராகவும், புதுக்கவிதைக்காரர்களில் தலைசிறந்தவராகவும் விளங்கும் தருமு சிவராமின் கவிதைகள், நவீனத்துவம் கொண்ட ஆன்மீக தேடலுக்கு உன்னத உதாரணங்களாகும். பரமஹம்ஸர், சீரடி சாயுபாபா, ரமணர், யோகர், அப்பாதுரை போன்ற ஞானிகளின் தாக்கத்தைப் பெற்று, வாழையடி வாழையாக மறையாமல் தைல தாரையாக வரும் இந்திய ஞானத்தின் உண்மை இயல்புகளைப் புரிந்து கொண்டவராக அவர் விளங்குகிறார்; இவருடைய இந்திய ஞானம் வைதீக நெறியினூடே தொடர்பறாமல் வந்த விவேகம் சார்ந்த விழிப்பு நிலையைச் சேர்ந்ததாகும். ஜோதிடம், எண் கணிதம் போன்ற மறைமுக (Occult) ஞானங்களிலும், புத்தரின் கொள்கைகளிலும் ஈடுபாடுடையவர் இவர்; நவீன விஞ்ஞானத்தின் ஆன்மீகத்தை நாடும் குணத்தையும், பிரபஞ்சமளாவிய அதன் இன்றைய எல்லையையும், மரபு ஞானத்துக்கு அது கொடுக்கும் வலிமையையும் உணர்ந்தவர்; இன்றைய நவீன ரிஷியான ஜே. கிருஷ்ணமூர்த்தியின் தத்துவத்திலும் ஈடுபாடுடையவர்; எனவே இலக்கணம் (Present) என்னும் தத்துவம் இவர் கவிதைகளில் வலியுறுத்தப்படுகிறது.

"யுகாந்திரங்களாயினும் நிலைத்திருப்பது ஒரு கணம் - இக்கணம்" என்கிறார் இவர். தீவிர மெய்மைத் தேடல், "காம உணர்வின் விருக்ஷ வேர்களை வீசி அறுத்து, களைந்து எடுத்துயர்த்தி விடுகிறது" என்று ஒரு கவிதையில் குறிப்பிடுகிறார்; மேலும் நேற்று நாளையற்று நிகழ்கால வினையாக உயிர்த்தது 'உள்ளல்' என்னும் ரமணரின் தத்துவம் என்றும் பாராட்டுகிறார்.

"அணுமயக் கண நடிப்பும், அண்டத்தின் காலாதீதமும் ஒன்றை ஒன்று ஊடுருவி, ஒரு பொறி எல்லையற்ற— ஒளியிருள் அற்ற—ஒரு பெரு வெளி தோறும் அணு மைய உயிராய் அதே கணம் உயிர்த்தது. மொக்கு அவிழ்ந்து அவிழ்ந்து துடித்தது; நிலைத்தது இக்கணம்; கணத்தின் மொக்கவிழ்ந்தால் காலாதீதம்" என்று முடிவுறுகிறது அவருடைய 'மேல் நோக்கிய பயணம்' என்னும் காவியம்.

✤

# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில், திருமலை

## தினசரி பூஜைகள், ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

**சனி, ஞாயிறு, திங்கள் மற்றும் செவ்வாய்க் கிழமைகளில்:**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 3-45 வரை : சுத்தி

3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை
(அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸஹஸ்ரநாம அர்ச்சனை,
(அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

5-30 முதல் 6-00 வரை : முதல்மணி, பலி, சாத்துமுறை.

6-00 முதல் மதியம் 12-00 வரை : ஸர்வதரிசனம்

மதியம் : 12-00 முதல் .1-00 வரை : சுத்தி, 2வது அர்ச்சனை, (ஏகாந்தம்) 2வது மணி.

1-00 முதல் இரவு 7-00 வரை : ஸர்வதரிசனம்

1-00 முதல் 7-00 வரை: கல்யாணோற்சவங்கள், ஆர்ஜிதபிரம்மோற்சவங்கள், வாகனசேவைகள் ஊஞ்சல்சேவை முதலியன

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், இரவு மணி

8-00 முதல் 10-00 (இரவு) ஸர்வதரிசனம்

10-00 முதல் 10-30 வரை : சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்:

10-30 இரவு : ஏகாந்த சேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

**புதன் கிழமைகளில் (ஸஹஸ்ர கலஸாபிஷேகம் நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்);

3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன.

3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை
(அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸஹஸ்ரநாம அர்ச்சனை, (அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை மற்றும் ஸஹஸ்ரகலஸாபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்;

6-00 முதல் 8-00 வரை : ஆர்ஜித ஸஹஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, 2வது அர்ச்சனை 2வது மணி;

8-00 முதல் இரவு 7-00 வரை : ஸர்வதரிசனம்.

மதியம் : 1-00 முதல் மாலை 7-00 வரை: ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜிதபிரம்மோற்சவங்கள் வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன,

இரவு : 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு, கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன

8-00 முதல் இரவு 10-00 வரை ஸர்வதரிசனம்.

10-00 முதல் 10-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள்;

10-30 இரவு : ஏகாந்தசேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

**வியாழக் கிழமைகளில் (ஆர்ஜித திருப்பாவாடை நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 4-30 வரை : நித்ய கட்டளை கைங்கர்யங்கள் அதாவது சுத்தி, தோமால, அர்ச்சனை முதல்மணி மற்றும் அபிஷேகத்திற்கானஏற்பாடுகள்;

4-30 முதல் 6-00 வரை : அபிஷேகம்

6-00 முதல் 7-30 வரை : மூலவருக்கு சமர்ப்பணை

7-30 முதல் 9-00 வரை : தோமால சேவை, அர்ச்சனை 2-வதுமணி, பலி, சாத்துமுறை முதலியன

9-00 முதல் இரவு 6-00 வரை : ஸர்வதரிசனம்

மதியம் 1-00 முதல் மாலை 7-00 வரை : ஆர்ஜித கல்யாணோற்சவம், பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் மற்றும் மற்றைய ஆர்ஜித சேவைகள்

இரவு 7 -00 முதல் இரவு 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், மற்றும் இரவு மணி

8-00 முதல் நடுஇரவு 10-00 வரை : ஸர்வதரிசனம்

10-00 முதல் 10-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள்;

10-30 இரவு : ஏகாந்தசேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

**வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)**

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்;)

3-30 முதல் 5-00 வரை : சாலிம்பு, சுத்தி, கைங்கர்யங்கள், காலை மணி, அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.

5-00 முதல் 6-30 வரை : அபிஷேகம்

6-30 முதல். 8-00 வரை : சமர்ப்பணை

8-00 முதல் 9-00 வரை : தோமால சேவை, அர்ச்சனை (தனி)

9-00 முதல் இரவு 7-00 வரை : ஸர்வதரிசனம்

இரவு 7-00 முதல் 8-00 வரை :: சுத்தி, இரவு கைங்கர்யங்கள், மணி, முதலியன;

8-00 முதல் இரவு 10-00 வரை ஸர்வதரிசனம்

10-00 முதல் 10-30 வரை : சுத்தி,

10-30 ஏகாந்தசேவை (ஆர்ஜிதம் ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்;)

# அத்வைதம் - ஒரு விளக்கம்

ஆதி சங்கரரின் அத்வைத சித்தாந்தத்திற்கு அடிப்படை நூல்கள் மூன்று. வாத நாராயணர் எழுதிய பிரம்ம சூத்திரம், வேதங்களுக்கு முதல் விளக்க உரைகளான உபநிஷதங்கள், பகவத் கீதை ஆகியவை. இந்த மூன்றுக்கும் 'பிரஸ்தானத்ரயம்' என்று பெயர். 'பிரஸ்தானம்' என்றால் பிரமாணம் இருப்பிடம் ஆதாரம் என்று பொருள். இதில் பகவத் கீதையை 'ஸ்ம்ருதிப்ரஸ்தானம்' என்றும், பிரம்ம சூத்திரத்தை 'நியாய ப்ரஸ்தானம்' என்றும், உபநிஷத்தை 'ச்ருதிப்ரஸ்தானம்' என்றும் சொல்வார்கள். அநுபவத்தை நினைத்துப் பார்த்தலே ஸ்ம்ருதிப்ரஸ்தானம். இவைகள் பிரமாணங்களல்ல. இவைகள் வழிவழியாக வந்தவை. மகாபாரதம் இதன் நூல். உபநிஷதங்களாகிற வேதாந்தங்கள் ச்ருதிப்ரஸ்தானம்—அதாவது நேராக அநுபவிப்பவை. இவை நேராக வந்தவை; ஆகையால் இவைகள் பிரமாணங்கள். பிரம்ம சூத்திரம் வேதாந்த நியாயங்களை, மாலையாகத் தொகுத்துக் கொடுத்திருப்பதால் இதற்கு நியாய ப்ரஸ்தானம் என்று பெயர் ஏற்பட்டது. இது நான்கு அத்தியாயங்களைக் கொண்டது. 1. சமந்தயாத்யாயம், 2. அபிரோதயாத்யாயம், 3. ஸாதனாத்யாயம், 4. புருஷார்த்தம் ஆவன.

இதில் 'சமந்தயாத்யாயம்' உபநிஷதங்களின் தாத்பரம் அந்த பிரம்மமாகிற பரம்பொருள்தான் என்று பரம்பொருளைப்பற்றிச் சொல்கிறது. இரண்டாவதாகச் சொன்ன 'அபிரோதயாத்யாயம்' இந்த ஸநாதன தர்மத்திற்கு மாறாகச் சொல்லப்பட்ட மற்ற மதக் கருத்துக்கள் முழு உண்மையைக் காணவில்லை என்பதை விளக்குகிறது. மூன்றுவதாகச் சொன்ன ஸாதனாத்யாயம் பிரம்மாநுபவத்தையும் (அதாவது மோக்ஷம்) அதை அடையும் வழியையும் சொல்கிறது. நான்காவதாகச் சொன்ன புருஷார்த்தம் மனித வாழ்வின் முழு முதற்பொருளை அதாவது அடையும் வழியையும் சொல்கிறது.

'அத்வைதம்' என்கிற சொல் இரண்டற்றது என்ற பொருள் கொண்டது. ஆதிபரம்பொருளாகிற 'பிரம்மம்' இரண்டற்றது என்பதே அதன் விளக்கம். எதை வாக்கும் மனமும் அடைய முடியாமல் திரும்பி விடுகிறதோ அதுவே 'பிரம்மம்' ஆகும். அது ஒன்றுதானே தவிர இரண்டல்ல.

இந்த 'பிரம்மம்' என்கிற பரமாத்மா ஒன்றே உண்மையாக இருப்பது; முழு முதல் உண்மையாக இருப்பது அது ஒன்றே! எப்போதும், எக்காலமும், எக்காரணங்கொண்டும் மாறாமல் இருக்கக் கூடியதுதான் முழு முதல் உண்மை! (Absolute reality) மற்றதெல்லாம் உண்மையென்று எவ்வாறு எடுத்துக்கொள்ள முடியும்? ब्रह्म सत्यं । लोकं मिथ्यं । பிரம்மத்தின் உண்மையான தன்மை முதலில் அது மாறாமல் எப்போதும் ஸத்யமாக இருக்கிறது. இதை நாம் பார்க்கின்ற பார்வையில் நுண்ணறிவால் அறியக் கூடுமாதலால் அது ஞானமாக இருக்கிறது. அதை அறிந்து அதிலே நம்மை ஓர் அங்கமாக ஆக்கிக்கொண்டு உண்மையான ஆனந்தத்தை அடைவது நமது புருஷார்த்தமாதலால் அது ஆனந்தமாக இருக்கிறது. ஆகவே பிரம்மம் என்னும் பரம்பொருள் ஸத்யம், ஞானம், ஆனந்தம் ஆகிய மூன்றுமாய், அவைகளையே தன் ஸ்வரூபமாய் அதாவது இவைகளையே ஸ்வரூப லக்ஷணமாய்க் கொண்டுள்ளது. ஸத்யம், ஞானம், ஆனந்தம் ஆகிய மூன்றும் பிரம்மத்தின் ஸ்வரூப லக்ஷணமாகும். நாம் கண்ணால் காண்கின்ற பிரபஞ்சம் பிரம்மத்தின் அம்சமாகும்; இந்தப் பிரபஞ்சம் உண்மையில் பார்க்கப் போனால் முழு முதல் உண்மையில் (Absolute reality) அந்த மூலப் பிரகிருதியாகிற பிரம்மமே என்பதை நாம் பார்க்க வேண்டும்.

பிரம்மம்தான் மாயையினால் பிரபஞ்சமாக நம் கண்ணுக்குத் தோன்றுகிறது. இந்த மாயைதான் பிரம்மத்தைக் கற்பிக்கிறது. ஆகவே பிரம்மம் பிரபஞ்சத்திற்கு நிமித்த காரணமாக இருக்கிறது. ஆனால் இந்த பிரம்மமே பிரபஞ்சமாக நிற்பதால் அதுவே உபாதான காரணமாகவும் ஆகிறது. ஆதிபரம்பொருள் விசுவகாரணன், விசுவரூபன் ஆகிய இரண்டுமாக இருக்கிறான். அதாவது நிமித்த காரணமும் அவனே! உபாதான காரணமும் அவனே! குயவனும் அவனே! குடமும் அவனே! இது நிகழ்வது மாயையினால்தான் என்கிறது அத்வைதம். பிரம்மம், பிரபஞ்சமாக இருளில் கிடக்கும் கயிறு நமக்குப் பாம்பாகத் தோன்றி பயத்தை உண்டாக்குவதுபோல...... மாயை என்கிற விவர்த்த காரணத்தாலே இவ்வாறு தோற்றுகிறது. இந்த மாயைதான் இல்லாத ஒன்றைக் கற்பிக்கிறது. இதை இல்லை என்றும் பொய் என்றும் சொல்ல முடியாது. ஆனால் உண்மை என்றும் சொல்ல முடியாது. இது விவரித்துச் சொல்ல முடியாத ஒன்று.

சாதாரணமாக எப்போதும் இருக்கும் ஒன்றை நாம் 'ஸத்' என்று சொல்லுகிறோம். எப்போதும் இல்லாமல் தோற்றம் அளிப்பது நம் கண்

'பூரம்' சத்தியமூர்த்தி

ணுக்குப் புலப்படுவது 'அஸத்' என்று சொல்லுகிறோம். பிரம்மம் எப்போதும் இருக்கிறது. ஆனால் அதே சமயம் எப்போதுமே இல்லாமல் நம் கண்ணுக்கு மாயையால் புலப்படுகிறது. அதனால் பிரம்மம் 'ஸத்' ஆகவும் அதே சமயத்தில் 'அஸத்' ஆகவும் இருக்கிறது. இது ஏன், எதனால் என்கிற காரிய காரணம் எல்லாம் பார்க்க இயலாது. அது அவசியமில்லை. அதாவது மாயையின் ஸ்வரூபமும் காரணமும் அவசியமே இல்லை என்கிறது 'அத்வைதம்'.

ஸத்யமாய், ஞானமாய், ஆனந்தமாய் இவைகளையே ஸ்வரூப லக்ஷணமாய்க் கொண்டுள்ள பிரம்மம், இந்தப் பிரபஞ்சத்திற்கும் இதிலே முளைத்திருக்கிற பொருள்களுக்கும் காரண கர்த்தாவாக அதாவது மண் குடத்திற்குக் குயவனாக இருப்பதே 'தடஸ்த லக்ஷணம்' என்கிறார் சங்கரர்.

பிரம்மம் அந்தர்யாமியாக இருப்பதால், உலகில் தோன்றிய ஜீவன்கள் யாவும் பிரம்ம மயமாக இருக்கிறதே தவிர வேறாக அல்ல... அது வேறாக ஆக முடியாது जीवो ब्रह्मययेव, न अपर: ஜீவாத்மாக்களாகிற ஜீவன்கள் மாயையிலிருந்து விலகி, சைதன்ய ஸ்வரூபத்திலிருந்து விடுபட்டு தேஹாந்தக் கரணத்தை விலக்கிவிட்டால் பரமாத்மாவுக்கும் அதற்கும் வேறுபாடே இல்லை என்கிறது 'அத்வைதம்'.

ஸத்யம், ஞானம், ஆனந்தம் ஆகிய மூன்றும் பிரம்மத்திற்கு ஸ்வரூபமே தவிர இது குணங்களல்ல... அப்படிச் சொல்வது பொருந்தாது. ஆகையால் பிரம்மம் நிர்க்குணப் பிரம்மமே என்று உறுதியாகச் சொல்கிறார் சங்கரர்.

ஜீவன் முக்தர்கள் பகவத் கீதையில் சொன்னபடி கர்மயோகத்தின் மூலம் சித்த சம்சுத்தி அடையலாமே தவிர மோக்ஷத்தை அடைய முடியாது. ஆனால் சித்த சம்சுத்திதான் ஞான மார்க்கம் என்றும் ஞான மார்க்கத்தால்தான் சைதன்யம் விலகி இறைவனை அடைய முடியும் என்கிறார் சங்கரர்.

இந்த பிரம்மமயமாக இருக்கும் ஜீவன்கள் பலவாக இருக்க முடியாது என்றும் அது ஒரே எண்ணிக்கையாகத்தான் (entity) இருக்க முடியும்.

இந்த ஜீவாத்மாக்கள் தேஹாந்தக் கரணத்தை விலக்கி சைதன்யத்தை இழக்கும்போது அது பரமாத்மாவுடன் இணைந்துவிடுகிறது. அந்த நிலையில் ஜீவாத்மா, பரமாத்மா என்கிற வேறுபாடே இல்லாமல் இரண்டற்ற நிலையில் உள்ளது என்று கூறுகிறது 'அத்வைதம்'.

"இரண்டற்றது என்றால் அது ஒன்றா?" என்கிற கேள்வி எழுகிறது. அதற்கு "அது ஒன்றல்ல!" என்று பதில் சொல்கிறது! அந்த நிலையில் அது இரண்டற்ற நிலைதானே தவிர அதை ஒன்று என்று சொல்ல முடியாது. அது இரண்டுமல்ல ஒன்றுமல்ல. அது விவரித்துச் சொல்ல இயலாத நிலை என்று மௌனமாய்த் தன் பலவீனத்தை ஒப்புக்கொள்வது போலத் தோன்றுகிறது அத்வைத சித்தாந்தம்!

ஆதிசங்கரரின் விஞ்ஞான ரீதியான விளக்கத்தைக் காணும்போது அவருடைய மேதாவிலாசத்தை நாம் வியக்காமல் இருக்க முடியாது. ஒப்புயர்வற்ற நமது வேதங்களிலிருந்து அவருக்குக் கிடைத்த தரிசனமே இந்த தரிசனத்வைதம்!

## அழகிய மணவாள நல்லூர்

திவ்விய தேசங்களையெல்லாம் சேவித்துக் கொண்டு வருகையில் அன்று மணவாள மாமுனிகள் மதுரைக்கு வந்து சேர்ந்தார். அங்கு கூடலழகரைச் சேவித்து மங்களா சாசனம் செய்தருளினார். அங்கேயே அன்று தங்கிவிட்டார். அந்நாட்டு அரசனான மஹாபலி வாணராயன் மணவாள மாமுனிகளின் மகிமையை அறிந்து அவரிடம் வந்து அடிவணங்கி அடிமை கொள்ள வேணுமென்று விண்ணபித்தான் மாமுனிகளும் அவனுடைய ஆர்வம் அறிந்து அவனுக்கு பஞ்ச ஸமஸ்காரங்களையும் செய்து பிரியமுடன் ஆட்கொண்டார். அவனும் அவரிடம் அதி வினயமுடன் அடிபணிந்து விடை பெற்று சென்றான். மாமுனிகள் அன்றைய நள்ளிரவுக்குப் பின் திரைமூடிய பல்லக்கில் அமர்ந்து பண் இசைக்க பயணம் புறப்பட்டார். சிறிது தூரம் சென்ற காலைக் கடன்களுக்காக வைகையாற்றங்கரையில் பல்லக்கு நின்றது. பல்லக்கிலிருந்து மணவாள மாமுனிகள் இறங்கியருள, அரசனான மஹாபலி வாணராயன் பல்லக்கு சுமக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களில் ஒருவனாய் விளங்கக் கண்டு வியப்பு அடைந்தார். "இதென்ன! இப்படியுமா!" என்று மனம் கனிந்தார். பல்லக்கு இறங்கியிருந்த "முந்தரசனந்தல்" என்ற அந்த கிராமத்தை அரசன், மாமுனிகளுக்கு தானமாக்கினான். 'அங்கீகரிக்க வேணும்' என்று அவாவுடன் வேண்ட, மாமுனிகள் மறுப்பு கூறாமல் ஏற்று "அழகிய மணவாள நல்லூர்" என அதற்கு பெயரிட்டு, அரசனையும் இனி அரசு பணிகளை கவனிக்கும்படி ஆசிகூறி அனுப்பினார்.

திரு. ஆர். சுப்பாராவ்-திருக்கோவலூர்.

# கீதையின் மோக்ஷ ஸந்யாஸ யோகம்

பகவத் கீதை மொத்தம் பதினெட்டு அத்தியாயங்களைக் கொண்டது ஆகும். பகவானால் தொகுத்துப் பாடப்பெற்றதே "பகவத்கீதை" என்பதன் அரும் பொருள் என்பர் கற்றறிந்த சான்றோர் பெருமக்கள். பகவத் கீதை என்று ஓர் தனிப்புத்தகமாக எழுதப்படவில்லை எனினும் மகாபாரதத்தின் பீஷ்ம பர்வம் 25-வது அத்தியாயம் தொடங்கி 42வது அத்தியாயம் வரை ஒரு பாகமாகவே பகவத் கீதை அமைந்துள்ளது.

பகவத் கீதைக்குத் தொன்று தொட்டு இன்று வரை பல உரைகள் எழுதப்பட்டுள்ளன. இருப்பினும் ஆச்சார்யர்களான ஸ்ரீசங்கரர் ஸ்ரீராமாநுஜர், ஸ்ரீமத்துவர் ஆகியோர்களின் பாஷ்யங்கள் தான் உயர்ந்தவை என போற்றப்படுகின்றது. இனி கீதையின் "மோக்ஷ ஸந்யாஸ யோகம்" என்ற வார்த்தையின் விளக்கம் யாது?

> ஸந்யாஸஸ்ய மஹாபாஹோ
> தத்வ மிச்சாமி வேதிதும் |
> த்யாகஸ்ய ச ஹ்ருஷீகேச ப்ருதக்கேசி
> நிஷூதந ||

ஸந்யாஸம், த்யாகம் என்ற வார்த்தைகளுக்கு உண்மையான பொருள் என்ன? என்று அர்ஜுனன் கேட்க அதற்கு பகவான் பின்வருமாறு பதில் கூறுகிறார்.

> காம்யாநாம் கர்மணாம் ந்யாஸம்
> ஸந்யாஸம் கவயோ விது: |
> ஸர்வகர்மபலத்யாகம் ப்ராஹுஸ்த்
> யாகம் விசக்ஷணா: ||2||

பிரதிபலன்களை எதிர்நோக்கிச் செய்யும் கர்மங்களை அறவே விட்டுவிடுதலை ஸந்யாஸம் என்று சான்றோர்கள் கூறுவர். ஒருவர் பின்பற்றிய சகல கர்மங்களின் பலன்களை விட்டு விலகி விடுதலை த்யாகம் என்று பெரியோர் கூறுவர்.

மேலே விளக்கப்பட்ட பொருளிலிருந்து தானம், தவம் என்ற கர்மங்களை விட்டு நாம் நீங்கக்கூடாது எனவும், மானிடர் அவைகளைப் பின்பற்றியே தீரவேண்டும் என்பதைத் தெற்றெனக் கூறுகிறது அல்லவா!

இதையே ஐந்தாவது அத்தியாயமான கர்ம ஸந்யாஸ யோகத்தில் பகவான் கூறுகிறார்

> ஸந்யாஸ: கர்ம யோகஸ்ச நி:
> ஸ்ரேயஸகராவுபௌ |
> தயோஸ்து கர்ம ஸந்ந்யாஸாத்,
> கர்மயோகோ விஸிஷ்யதே ||2||

கரும ஸந்யாஸம் கருமயோகம் இவ்விரண்டும் மோக்ஷத்தைத் தரவல்லன. ஆனால் இவ்விரண்டில் கருமயோகமே தலைசிறந்தது. இன்ப துன்பம் இவைகளை ஒருவன மேற்கொள்வதில்லை என்றால் அவனை எப்பொழுதும் சந்நியாசி அதாவது முற்றும் துறந்த முனிவன் என்று அழைக்கலாம் அல்லவா! ஆகவே கீதையின் பதினெட்டு அத்தியாயங்களிலும் இந்த பதினெட்டாவது அத்தியாயமான மோக்ஷ ஸந்யாஸ யோகம் தான் சகல சாஸ்திரங்களின் அடிப்படையாகத் தன்னகத்தே கொண்டுள்ளது என்பர், கற்றறிந்த பெருமக்கள். இந்த மோக்ஷ ஸந்யாஸ யோகம்தான் உயர்ந்தது என்றும் கூறுவர்.

கர்மயோகம், ஞானயோகம், பக்தி யோகம் இவற்றில் மோக்ஷ ஸந்யாஸ யோகம் அடங்கி உள்ளது. இக்கருத்தையே திருவள்ளுவரும் இப்பிறப்பில் நல்லது செய்தால் அடுத்த பிறவியில் நமக்கு மோக்ஷம் கிடைக்கும் என்று கூறியது விளங்குகிறதன்றோ!

கீழ்வரும் சாஸ்திர வாக்யம் ஒன்று இதைத்தான் கூறுகிறது.

> **ईश्वरे कर्तृताबुद्धिः सत्त्वोपादेयताऽन्तिमे ।**
> **स्वकर्मपरिणामश्च शास्त्रसारार्थ उच्यते ॥**

சாத்விகத் தியாகத்துடன் செய்யக்கூடிய சகல கருமங்களையே விரும்புவதையும் அதற்கு ஏற்றபடி கருமங்கள் மூவகையாகப் பிரிக்கப்பட்டதையும், சாத்வீக கர்மங்களுக்குப் பயனாக முக்தி, சரணாகதி இவைகளையும் பகவான் உபதேசித்தார்.

'தியாகி' எனப்படுபவன் யார்? என்பதற்கு பகவான் பின்வருமாறு அர்ஜுனனுக்குக் கூறுகிறார்.

> ந ஹி தேஹப்ருதா ஸக்யம் த்யக்தும்
> கர்மாண்யஸேஷத:
> யஸ்து கர்மபலத்யாகி ஸ
> த்யாகீ த்யபிதியதே ||

உடல் உறுப்புக்களைத் தாங்கும் ஒருவன் கர்மங்களை நீக்க துறந்து விடுவது என்பது எவராலும் இயலாத காரியம். எனவே கர்மப்பயனைத் துறந்தவரே இம்மண்ணுலகில் தியாகி எனப் போற்றப்படுகிறான்.

---

**திரு. எஸ். சுப்ரமணியன், எம் ஏ., பி.இடி.**
*சேலம்-6.*

---

இனி கர்மத்தை செய்யத்தூண்டுபவைகளும் நிறைவேற்றுபவைகளும் காண்போம்!

> ஜ்ஞாநம் ஜ்ஞேயம் பரிஜ்ஞாதா
> த்ரிவிதாகர்மசோதநா |
> கரணம் கர்ம கர்த்தேதி த்ரிவித
> கர்ம ஸங்க்ரஹ: || 18 ||

அறிவு, அறிந்து கொள்ளப்படும் பொருள், அறிந்து கொள்ளுபவன் இம்மூன்றும் முதலில் கர்மத்தை செய்யத்தூண்டுபவை. எந்திரக்கருவி, செயல், செய்பவன் இம்மூன்றும் கர்மத்தை நிறைவேற்றுபவைகளாகத் திகழ்கின்றன.

இனி ஒருவனுடைய புத்தியை பல வகையாகப் பிரித்து பகவான் கூறுகிறார்.

ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச கார்யா
காரியே பயாபயே |
பந்தம் மோக்ஷம் ச யா வேத்தி புத்தி:
ஸா பார்த்த ஸாத்விகி ‖ 30 ‖

அதாவது செய்யத் தகுந்த புத்தி— செய்யத்தகாதபுத்தி; உறவு-மோக்ஷம் ஆகியவைகளை அறிவதுதான் புத்தி என்பர்.

ராஜஸ புத்தி என்பது தர்மம்–அதர்மம், செய்யத்தக்கது–செய்யக் கூடாதது, இருப்பவற்றை இருக்கின்றபடி கூறுவது ஆகும்.

அயதாவத் ப்ரஜாநாதி புத்தி: ஸா
பார்த்த ராஜஸீ ‖31‖

என்ற சுலோகத்தால் இதனை அறியலாம்.

அஞ்ஞானத்தால் எந்த புத்தி மறைக்கப்பட்டு அதர்மத்தைத் தர்மமென்றும், இதைப் போல் எல்லா பழக்கங்களையும் உண்மைக்கு மாறாக இருப்பதாக அறிவதே தாமஸ புத்தி ஆகும்.

ஸர்வார்த்தான் விபரீதான் ஸ்சபுத்தி :
ஸா பார்த்த தாமஸீ ‖32‖

என்றசுலோகத்தால் இதனைப் புரிந்து கொள்ளலாம். இதையே பகவத் விபூதியைக் காண முடியாதவர், அதை பகவத் கீதை மூலம் அனுபவிக்க முடியும் என்பதை ஸ்ரீராமாநுஜரும், நாராயணனே பரதெய்வம் என்பதைக் கீதை மிக்க விளங்கக் கூறுகின்றது என்பதை ஸ்ரீமத்வாசார்யர் என்பவரும், கீதையில் சொல்லியது போலவே நடக்க வேண்டும் என்பதை வல்லபாசார்யரும் கூறுவது போல நாம் கண்ணன் பிறந்த நாளில் பகவான் சிறப்புக்களைப்பாடி சுகம்பெற வேண்டும்.

அடுத்தப்படியாக ஒருவன் கர்மத்திலே ஈடுபட்டால் சித்தி அடைவது எங்ஙனம் என்பதை பகவான்,

யத : ப்ரவ்ருத்திர் பூதாநாம் யேந
ஸர்வமிதம் ததம் |
ஸ்வகர்மணா தமப்யர்ச்ய ஸித்திம்
விந்ததி மாநவ : ‖46‖

ஆண்டவனுக்கு ஒருவன் செய்யக் கூடிய பூஜையிலிருந்து இன்பம்பெறச் செய்து அதனால் ஏற்படும் சந்தோஷத்தினால் சித்தி பெறுகிறான் எனக் கூறுகிறார். ஒருவனுக்கு அமைந்த இயற்கை கர்மத்தை ஒழுங்காகச் செய்பவன் நிச்சயமாக பாவத்தை அடையமாட்டான் என்பதை,

ஸர்வாரம்பா ஹி தோஷேண
தூமே நாக் நிரிவாவ்ருதா: |
‖ 48 ‖

என்ற சுலோகத்தால் நன்கறியலாம்.

எனவே பகவான் கண்ணன் அர்ஜுனனுக்கு ஸந்யாஸம், த்யாகம் என்ற வார்த்தைகளுக்குப் பொருள் கூறும் போது பகவான் சிறப்பையும் கூறுகிறார்.

மச்சித்த : ஸர்வதுர்காணி மத்ப்ர-
ஸாதாத்தரிஷ்யஸி |
அத சேத் த்வமஹங்காராந்ந
ஸ்ரோஷ்யஸி விநங்க்ஷ்யஸி ‖58‖

யத ஹங்காரமாஸ்ரித்ய ந யோத்ஸ்ய
இதி மந்யஸே
மித்யைஷ வ்யவஸாயஸ்தே
ப்ரக்ருதிஸ்த்வாம் நியோக்ஷ்யதி ‖59‖

அர்ஜுனா! எப்பொழுதும் என்னையே எண்ணிக்கொண்டிரு. என்னையே துதிபாடு. என் அருளால் எவ்வகை துன்பத்தையும் நீ கடந்து விடுவாய். அகங்காரத்தால் நான் கூறியதை நீ பின்பற்றாவிட்டால் நீ அழிந்து விடுவாய். உன் இயல்பு குணம் உன்னைப் போர்த் தொடுக்கச்செய்யத் தூண்டி விடும் என்று பகவான் சிறப்புறக் கூறுகிறார்.

மறு இடத்தில் பகவான் கண்ணனை துதித்தால் அர்ஜுனன் அடையும் பயனை பின்வருமாறு கூறுகிறார்:

மந்மனா பவ மத்பக்தோ மத்யாஜீ
மாம் நமஸ்குரு |
மாமே வைஷ்யஸி ஸத்யம் தே
ப்ரதிஜானே ப்ரியோऽஸிமே ‖65‖

'அர்ஜுனா! என்னிடத்தில் உன் மனம் வை. நீ எனக்குப் பக்தன்; எனக்கே பூஜை செய். என்னை துதி. இது உண்மை, நீ எனக்கு அன்பன்' என பகவான் கூறுகிறார்.

அர்ஜுனனுக்கும் பகவான் கண்ணனுக்கும் நடந்த இந்த உரையாடலை யார் ஒருவர் படிக்கின்றாரோ அவர் ஞான நயத்தால் பகவான் கண்ணனை ஆராதித்ததாக பகவான் எண்ணுவார். இதைத்தான் கீழ்வருமாறு கூறுகிறார்.

அத்யேஷ்யதே சயஇமம் தர்ம்யம்
ஸம்வாத மாவயோ : |
ஞ்ஞாநயஜ்ஞேந தேநாஹமிஷ்ட:
ஸ்யாமிதி மே மதி: ‖70‖

அர்ஜுனனுக்கு ஏற்பட்ட மயக்கம் பகவான் உபதேசித்ததிலிருந்து அஞ்ஞான மயக்கம் நீங்கியதை,

கச்சிதேதச்ச்ருதம் பார்த்த த்வயை
காக்ரேண சேதஸா: |
கச்சித ஞ்ஞாநஸம் மோஹ
ப்ரநஷ்டஸ்தே தநஞ்ஜய ‖72‖

என்பவைகளால் அறியலாம் இதனால் பகவானின் அருளால் மோகம் அழிந்ததையும் சந்தேகங்கள் நீங்கியதையும், சொன்னபடி செய்ததையும் அர்ஜுனன் உணர்ந்தான்.



# ராகு-கேது பலன்

பாம்பைக் கண்டால் படையு நடுங்கும் என்பர். பாம்பிடம் விஷமிருப்பதால் பார்ப்பதற்கு பயம், பல ஹீனம் ஏற்படுவது இயல்பே. அது போலே பாம்பு எனப்படும் ராகு கேதுவுடன் கிரகங்கள் சேரும்போது பலமிழந்து விடுகின்றன. பூமியின் வடதென் துருவங்களால் ஏற்படும் நிழல்களே ராகு கேது என்று சொல்லப்படுகிறது. அதனால் ராகு கேதுவை நிழற் கிரகம் என்பர். ராகு கேதுகளுக்கு மற்ற கிரகங்களைப் போல உருவ அமைப்பு இல்லை. கண்ணால் பார்க்கவும் முடியாது. அவைகள் இரண்டும் நிழற் புள்ளிகள். இவை சந்திரன் பூமியின் சுழற்சி வேகத்தினால் புள்ளிபோல் காணப் படும் கிரகமாகும். மற்ற கிரகங்கள் தரும் ஒளியை ராகு கேதுக்களின் நிழல் சாயையானது மறைத்து விடும் சக்தி உடையது. இதனால் பாம்புடன் சேரும் கிரகங்கள் பலமிழக்கின்றன. ராகு கேதுக்கள் தங்களுடன் இருக்கும் கிரகங்களின் காரகப் பலன்களை காந்தம்போல கவர்ந்து ஈர்த்து தமக்கு அதிகாரம் வரும் போது திசாபுக்திகளில் சுபாசுப பலன்களை ஜாதகருக்குத் தருவர்.

ராகு கேதுகளுக்குச் சொந்த ராசி கிடையாது. ஆனால் நட்சத்திரம் உண்டு. ராகு கேதுக்கள் நின்ற ராசி நட்சத்திரம் கண்டகோள் கூடிய கோள் முதலிய பலன்களை வாங்கித் தங்கள் திசாபுக்தியில் தருவர். ராகு கேது அச்சில் மாட்டும் கிரகங்கள் தங்கள் பலனை இழந்து விடுவதால் அந்த கிரக திசை செயல் படாமல் போய் விடுகிறது. துலா லக்கினத்தில் உச்ச சனியுடன் ராகு கேது கூடி இருந்தால் சனி யோககாரனாய் இருந்தாலும் சனி திசை பலன் தரமுடியாது. சனியின் பலனை ராகு வாங்கி விடுவதால் ராகு திசை ராஜயோகம் தரும். ராகு கேது அச்சில் சேரும் கிரகங்களை அடக்கி ஆளும் நிலைமை நாயகர்களாக ராகு கேது விளங்குகின்றனர். ராகுவைப்போல் கொடுப்பவனுமில்லை. கேதுவைப் போல் கெடுப்பவனும் இல்லை என்பர். ராகு சுபபலனை தரவேண்டுமென்றால் திடீர் என்று அதிர்ஷ்டம் அளித்து குபேரனாக்கி விடுவார். கேது ஒருவரை கெடுக்கவேண்டுமென்றால் பொன் பொருள், பூமி, கன்று, மாடு மனைவி மைந்தர் செல்வம் இழந்து ஓட்டாண்டியாக்கி நடுத்தெரு நாராயணனாய் நிறுத்தி விடுவார். இந்து தெய்வங்களில் மகாவிஷ்ணு ஆதிசேஷன் பரம சிவன் முதலிய கடவுளின் உடம்பில் அணிகலனாகவும், சுப்ரமண்யர் பாம்புடனும் இருப்பதாலும் பாம்புக்குப் பெரும் தெய்வீக சக்தி ஏற்படுகிறது.

நவகிரகங்களில் ராகு கேது விநோதமானவர்கள். இரட்டைப் பிள்ளைகள் போன்று காட்சியளிப்பர். ஏழுக்கு ஏழாய் 180 டிகிரியில் சஞ்சரிப்பர். ஏக காலத்தில் இருவரும் அடுத்த ராசிக்கு பெயர்ந்து செல்லும் தனிச் சிறப்பைப் பெற்றவர்கள். எல்லா கிரகங்களும் வலமிருந்து இடமாக கடந்து செல்வர். ஆனால் ராகு கேதுக்கள் மட்டும் இடமிருந்து வலமாக அப்ரதட்சணமாய் கடந்து செல்வர். ராகு கேதுக்களுக்கு அஸ்தங்கம் வக்கரம் வேதாநிலை திதி சூன்யம் போன்ற தோஷங்கள் ஏற்படுவதில்லை. ஆனால் ஆட்சி பெற்ற கிரகத்துடன் ராகு கேது கூடினால் ஆட்சி பெற்ற கிரகத்தின் பலனை பறிக்கும் சக்தியில்லாமல் போய்விடும். அதாவது பலஹீனமாகும்; ஆதலால் ஆட்சி பெற்ற கிரகத்துடன் ராகு கேது கூடி இருந்தால் யோகம் தர இயலாது.

ராகு கேதுவை புரட்சி கிரகங்கள் என்று கூறலாம். ஏனென்றால் திருப்பாற்கடல் அமுத விநியோகத்தில் ஒரு புரட்சி ஏற்படுத்தி அதில் உருவானவர்கள் ராகு கேதுக்களாகும். தேவர்கள் அசுரர்களின் உதவியால் திருப்பாற்கடலை கடைந்து அமுதம் எடுத்து, அதை திருமால் மோகினி அவதாரத்தில் தேவர்களுக்கு மட்டும் வழங்கி வந்தார். ஆனால் அமுதம் எடுக்க உதவும் அசுரர்களுக்கு கொடுக்கவில்லை. அமுதம் கிடைக்காத அசுரர்களின் ஒருவரான சுவர்பானு என்ற அரசன் ஒரு தேவ குமாரன் போல வேடம் தரித்து தேவர்களுடன் நின்று அமுதம் வாங்கிப் புசித்து விட்டான். உலகத்தை சுற்றி வரும் சூரியர் சந்திரர்களுக்கு இது தெரிந்து விட்டது. சூரியர் சந்திரர்கள் அவ்அரசனை திருமாலிடம் காட்டிக் கொடுத்து விட்டனர். கோபங் கொண்ட திருமால் அமுதம் அள்ளும் கரண்டி சட்டுவத்தால் அவ்வரசனை தாக்கித் தலைவேறு உடல் வேறாய் செய்து விட்டார்.

---

**திரு. எஸ். பட்டாபிராமன்,**
**மன்னார்குடி**

---

தேவவேடம் பூண்டிருந்த சுவர்பானு இறைவர் புகழ் தரக்கூடிய அமுதம் உண்டதின் பலனால் மரணமிலா பெருவாழ்வு பெற்றார். அசுரனின் தலைக்குங்கீழ் பாம்பு உடல் வளர்ந்து ராகுவாகியது. அசுரனின் உடல் பகுதிக்கு மேல் ஐந்து தலை உடைய பாம்புத்தலை வளர்ந்து கேதுவாகியது. பிறகு திருமாலின் திருவருளால் அவ்வுருவங்களும் ராகு கேது என்று அழைக்கப்பட்டு நவ கிரக பரிபாலனத்தில் இடம் பெற்று விளங்கி வருகின்றன. சூரியர் சந்திரர்கள் தங்களைக் காட்டி கொடுத்ததால் அவர்கள் மீது ராகு கேதுக்களுக்கு

எப்போதும் தீராப்பகை இருந்து வருகிறது. இதன் காரணமாக சூரியர் சந்திரர்களை வஞ்சம் தீர்த்துக்கொள்ளும் வகையில் ஆண்டு தோறும் நிகழும் கிரகணத்தின் போது சூர்யர் சந்திரர்களை மறைத்து ராகு கேதுக்கள் ஒன்றரை மணி நேரம் செயலற்றுப் போகச் செய்து விடுகின்றனர் என்று சொல்லலாம்.

கிரகணம் பிடித்து வானில் ஒரு இருள் ஏற்படுவதை சூரியன் சந்திரனை பாம்பு விழுங்குவதாகவும் பிறகு விடுவதாகவும் சிலர் கூறுவார்கள்; ஆனால் உண்மையில் பாம்பு பிடிப்பது கிடையாது. சூரியனும் சந்திரனும் அமாவாசை திதியில் ஒரு ராசியில் கூடுவர். ராகு நிற்கும் ராசியில் சூரியன் சந்திரன் கூடி சந்திரன் ராகுவை கடந்து செல்லும் போது ராகுவின் நிழல் மறைக்கப்பட்டு $1\frac{1}{2}$ மணி நேரம் ராகு கேது அச்சில் சூரியன் சந்திரன் மறைந்து ஒளி இழந்து செயலற்று விடுகின்றனர்; இந்த நிகழ்ச்சிக்கு சூரிய கிரகணம் எனப்படும். ராகு நிற்கும் ராசியில் ஏற்படுவதால் ராகு கிரகஸ்தம் எனப்படும். சூரியனுக்கு 180 டிகிரியில் பௌர்ணமி திதியில் சந்திரன் இருப்பார். ராகு கிரகஸ்தம் முடிந்ததும் சந்திரன் கடந்து 14 நாட்கள் கழித்து கேதுவுடன் சஞ்சரிப்பார். ராகு சூரியன் சேர்க்கைக்கு ஏழில் கேதுவுடன் சந்திரன் சஞ்சரிக்கும் போது சந்திரன் ஒளி கேதுவின் நிழலால் $1\frac{1}{2}$ மணிநேரம் மறைக்கப்பட்டு சந்திரன் ஒளி இழந்து செயலற்று விடுகிறது. இந்த நிகழ்ச்சிக்கு சந்திர கிரகணம் எனப்படும். கேது நிற்கும் ராசியில் சந்திரன் சேரும்போது ஏற்படுவதால் கேது கிரகஸ்தம் எனப்படும்.

உலகிலுள்ள சகல ஜீவராசிகளுக்கும் உயிர் ஒளி ஜீவன் தரும் சூரியன் சந்திரன் ராகு கேதுவால் பீடிக்கப்பட்டு கிரகணத்தின் போது பிறந்த குழந்தைக்கு ஆயுள் ஆரோக்கியம் இருக்காது. கிரகணத்தின் போது வயிற்றில் உணவு இருந்தால் $1\frac{1}{2}$ மணி நேரம் சூரியன் சந்திரன் சக்தியில்லாமல் ஏதாவது வியாதியைத்தரும் என்பதற்காக கிரகணம் முடிந்து குளித்துவிட்டு புசிக்கவேண்டும் என்ற விதியை பெரியோர்கள் வைத்திருக்கின்றனர். கர்ப்பிணிகள் கிரகணத்தின் போது காய்கறி அரிவது போன்ற, ஏதாவது வேலை வெட்டி செய்தால் கருவில் இருக்கும் குழந்தையின் உறுப்புக்கள் பாதிக்கும் என்பதால் வேலை வெட்டி செய்யாமல் ஓய்வில் இருக்கவேண்டுமென்று சொல்கின்றனர்.

புகலவே ராகுகேது சம்மந்தமாகில்
பொல்லாத விரணமுடன் பெருகும் நோயும்
அகலவே கடன்பட்டு யலையச் செய்யும்
அழகு போம் தேடியபொருளும் போகும்
இகலவே தீராத வழக்குண்டாகும்
எத்தொழிலை செய்தாலும் நஷ்டங் காணும்
தகலவே அரசரூட பகையும் நேரும்
தானறிந்து யப்பலனை சொல்லுவாயே.

சூரியன் சந்திரன் கிரகணத்தின் போது ராகு கேதுவுடன் சம்மந்தம் பெறும்போது பலமிழப்பதைக் காண்கின்றோம். அதுபோல மற்ற கிரகங்களும் ராகு கேதுவுடன் கூடும்போது நோய் நொடி காயம் கடன் நஷ்டம் விரயம் வம்பு வழக்கு தொழில் முடக்கம் அரசால் தொல்லை ஏற்படுகிறது; ராகு கேதுவுடன் எந்த கிரகம் சேருகிறதோ அந்த கிரககாரப்பலன் பல ஹீனமாகும். குரு சேர்ந்தால் புத்திர தோஷம், சுக்கிரன் சேர்ந்தால் மனைவிக்கு தோஷம், சூரியன் சேர்ந்தால் தந்தைக்கு தோஷம், சந்திரன் சேர்ந்தால் தாய்க்கு தோஷம், செவ்வாய் சேர்ந்தால் சகோதரதோஷம் ஏற்படுகிறது.

ராகுகேது நல்ல அமைப்பை பெற்றால் வாழ்க்கையில் உயர்ந்த நிலையை பெறுவர். மற்ற கிரகங்களைவிட அதிக வல்லமை உடையன. அமைப்புக்கு தக்கவாறு இன்ப துன்ப பலன்களை கொடுப்பர். ராகு கேது கெட்டால் ஆபத்து அங்கஹீனம் குஷ்டம் பயித்தியம் பரதேசவாசம் வியாஜ்யம் வழக்கு களவு இழப்பு வீண்பழி ஆபரேஷன் பில்லி சூன்யம் மயக்கம் வலி மூளைக்கோளாறு போன்ற கெடுதல்கள் ஏற்படும். கிரிமினல் குற்றவாளிகளின் ஜாதகங்களில் ராகு செவ்வாய் கூடி இருக்கும். ஞானி ரிஷி மகான் ஜாதகங்களில் செவ்வாய் கேது சேர்ந்திருக்கும். வீரிய கிரகம் செவ்வாய் ஞான கிரகம் கேதுவுடன் கூடும் போது ஞானத்திற்கு வீரியம் ஏற்படுவதால் இகலோக யோகம் இழந்து பரலோக ஞானம் சித்தியாகிறது.

அன்பான மேஷம் கடகம் கன்னி யாராசி ஆனதோர் விருச்சிக மகர ராசி தன்னில் இன்பமாக ராகுகேது இருப்பாரானால் இராஜயோகத்தை அனுபவிப்பர் மேஷம் ரிஷபம் கடகம் கன்னி விருச்சிகம் மகரம் முதலிய ராசிகளில் ராகுகேது இருந்தால் யோகம் தருவர். ராகு கேதுக்கள் கேந்திரத்தில் இருக்கும் போது திரிகோணதிபதிகளான 5,9 அதிபர் சேர்க்கை பார்வை பெறுவது யோகமாகும். 5,9 ல் இருக்கும் போது கேந்திராபதி சம்மந்தம் பெற்றால் யோகம் தருவர். நீச்சகிரகம் ராகு கேதுவுடன் கூடினால் நீச்சபங்க ராஜயோகமாகும். ராகு கேதுக்கள் சமசப்தமத்தில் இருப்பதால் ராகு கேதுக்களுடன் நீச்ச பங்க ராஜயோகமாகும். 8, 6, 10, 11 ல் ராகு கேது இருப்பது வெகு விசேஷமாகும். எதிலும் வெற்றி எதிரி நாசம் திடீர் அதிர்ஷ்டம் பட்டம் பதவி பெற்று பெரிய மனிதராய்த் திகழ்வர்.

ராகு பலமானால் அரசாங்க பதவி, வெளிநாட்டு வர்த்தகம் ஆதாயம் தரும். ராகு பயணக்காரர். தூரப் பயண, இடப்பெயர்ச்சி, சதாசஞ்சாரம் ரேஸ், லாட்டரி, திடீர் அதிர்ஷ்டம் தரும், விகட விநோத வித்தை நல்ல இடங்களில் நட்பு, எதிர்பாராத லாபங்கள் வரும். கேது பலமானால் பெரிய டாக்டராகலாம். எலக்ட்ரிஷியன் துப்பறியும் இலாக்கா சுரங்க வேலை நாட்டு வைத்தியம் குயுத்தி

தந்திரம் வேதாந்த அறிவு முக்தி மோட்சம் பெறுவர். பகைவரை வெல்வார். நோயை நீக்குவார். மகான், படித்தவர் ஆசி, தெய்வீக வழிபாடு ஞானம், திடீர் வழியில் செல்வம் பெறுவார்.

குடும்பம் என்னும் இரண்டாமிடம் களத்திர ஸ்தானம் என்னும் 7 மிடம் ஆயுள் மாங்கல்யஸ்தானம் 8 போக ஸ்தானம் 12 முதலிய இடங்களில் ராகு கேது இருந்தால் தோஷமாகும். சுபகாரியம் சுணங்கும். தீயபலன் களைத் தரும். புத்திர ஸ்தானம் 5-ல் ராகு கேது இருந்தால் புத்திரதோஷமாகும். ஜாதகத்தில் கர்ப்ப தோஷம் இருந்தால் நாக தோஷம் கழிக்க வேண்டும். ராகு கேதுக்களுக்கு பிரீதி அபிஷேக ஆராதனை செய்து வெள்ளி நாகப்படம் சாத்தி தானம் செய்துவிடவேண்டும். நாக நாதர் நாகேஸ்வரர் என்று நாகத்தின் பெயரை தாங்கிய கோயில்களிலும் செய்யலாம். ராகுகேது தோஷ பரிகாரமாகி சுபகாரியம் மங்கள காரியம் சந்தான பாக்கியம் சௌகரியம் சம்பத்து ஏற்படும். ராகுகேதுவின் தெய்வமான துர்க்கை காளியை வழிபடலாம். வெள்ளிக்கிழமை 10½ முதல் 12 மணி வரை ராகு காலத்தில் துர்க்கைக்குத் தீபமிட்டு அர்ச்சனை செய்வதும் நல்ல பரிகாரமாகும்.

ராகுவால் தீயப்பலன் ஏற்பட்டு ராகு திசை நடப்பவர்கள் ராகு கிரக புக்தி பார்வை சம்மந்தம் உடையவர்கள் ராகு பரீதி சாந்தி செய்யவேண்டும். நவகிரகத்திலுள்ள ராகுவுக்கு அர்ச்சனை செய்யலாம். ஞாயிற்றுக் கிழமையில் ராகு பாதத்தில் ராகுவின் தான்யமான உளுந்தை வைத்து தீபமிட்டு ஒன்பது தடவை வலம் வரலாம். கோமேதக ஜாதிக்கல்லை அணிந்து வரலாம். ராகு கிரகமூர்த்தி க்ஷேத்திரமான திருப்பதிக்கு அருகே ரேணுகுண்டாவின் சமீபமுள்ள காளஹஸ்தி சென்று ஸ்ரீ காளஹஸ்தீஸ்வரரை வழிபட்டு வரலாம்.

" நகத்வஜாய வித்மஹே,
பத்மஹஸ்தாய திமஹி
தந்நோ ராகு; ப்ரசோதயாத் "

என்ற ராகு காயத்ரியை பயபக்தியுடன் தினசரி ஜெபித்து வந்தால் விசேஷமான பலன் ஏற்படும். தடைபட்ட கல்யாணம் திடீரென்று நடக்கும்.

கேது சன்னியாசி கிரகமாகும். மங்கள கார்யத்தை தாமதப் படுத்துவார். கேதுவால் தீமை ஏற்பட்டால் கேதுவுக்கு பிரீதி செய்யலாம். கேதுவின் தான்யமான கொள்ளினைத் திங்கள் கிழமையில் கேது பாதத்தில் வைத்து தீபமிட்டு வழிபடவேண்டும். ஒன்பது தடவை வலம் வரவேண்டும். வெள்ளி நாகப் படம் சாத்தி தானமாக கொடுக்கலாம். வைடூரிய ஜாதிக்கல்லை அணிந்து வரலாம். குடும்பத்தில் இறந்து போனவர்களை நினைத்து பூஜிக்க வேண்டும். காளி துர்க்கையை வழிபடலாம். கேது கிரகமூர்த்தி க்ஷேத்திரமான காளஹஸ்தி சென்று வழிபட்டு வரலாம்.

" அஸ்வத்வஜாய வித்மஹே:
ஸூல ஹஸ்தாய திமஹி
தந்ந; கேது: ப்ரசோதயாத் "

என்ற கேதுவின் காயத்ரியை பயபக்தியுடன் ஜெபித்து வந்தால் கேது தோஷம் நீங்கி பரிகாரமாகி சௌகரியம் ஏற்படும். தடைப்பட்ட திருமணம் எதிர்பாராது முடியும். ராகு கேது பலமிக்கவர். ராகு கேது ஜாதகத்தில் பலமானால் பிரபலயோகம் தருவர்.

## அதிசயம்!

கொதிக்கும் நெய்யில் மிதக்கும் அப்பத்தை வெறும் கையால் வாரி எடுக்கும் அதிசயத்தை பார்த்திருக்கிறீர்களா?

ஸ்ரீ வில்லிபுத்தூர் நாச்சியார் பட்டி சாலியர் தெருவில் வருடா வருடம் மாசி மாதம் சிவன் ராத்திரி திருவிழா நடைபெறுகிறது.

உருவங்களோ, விக்கிரகங்களோ இல்லாத ஒரு சிறிய கோவிலில் சிவ ராத்திரியன்று இரவு இத் திருவிழா நடைபெறுகிறது.

நெசவு சாலியர் சமூகத்தை சேர்ந்த கோவில் பூசாரி போத்தி தன் நாக்கில் சூடனை எரித்து மாடத்தி, நீலமுத்து, வெள்ளையம்மாள், லாட சந்நியாசி; மதுரை வீரன் முதலிய ஸ்வாமிகளை வரவழைத்து ஆடுகிறார். பலர் வரம் கேட்கின்றனர்; சிலர் குறி கேட்கின்றனர்; விபூதி பூசி பதில் சொல்கிறார்.

பின்பு கோவிலில் 'தகதக' வென்று எரியும் அடுப்பில் இரும்புச் சட்டியில் நெய்யை ஊற்றி கொதிக்கச் செய்து, வெல்லம், தேங்காய் அரிசி மாவு கலந்து அப்பம் சுடுகிறார். இதைக் கொதிக்கும் நெய்யில் ஆயுதம் எதுவும் இல்லாமல் வெறும் கையால் எடுத்துக் கூடையில் வைக்கும் அரிய காட்சியைக் காண வருடா வருடம் நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் வருகின்றனர்.

oo oo oo oo oo

ஸ்ரீ வில்லிபுத்தூர் ஸ்ரீ ஆண்டாள் கோவிலின் உட்பிராகாரச் சுவரில் 108 வைஷ்ணவ கோவில்களில் உள்ள ஸ்வாமிகளின் திருஉருவங்கள் அந்தந்தக் கோவிலில் உள்ளபடி மிக அழகான வண்ணத்தில் எழுதியிருக்கிறார்கள்.

இந்தக் கோவிலினுள் சென்று சுவர்சித்திரங்களைப் பார்த்தாலே நாம் 108 ஸ்தலங்களுக்கும் சென்று சேவித்தது போன்ற பிரமை உண்டாகிறது.

தகவல்: எஸ். எஸ். மணியம்-ஸ்ரீவில்லிபுத்தூர்.

# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# நன்கொடை திட்டத்தின் கீழ் குடில்கள்

திருமலையில் யாத்திரிகர்களின் வசதியை மனதிற்கொண்டு, அங்கு மேலும் பல தங்கு வசதிகளை அமைத்துத்தர தி. தி. தேவஸ்தானம் முழு முயற்சியை மேற்கொண்டுள்ளது. இவ்வகையில், பக்தர்கள் மற்றும் பரந்தமனப்பான்மை கொண்ட யாத்திரிகர்களின் கூட்டு முயற்சியுடன் தன் நன்கொடை திட்டத்தின் கீழ் மேலாண்மை இம்முயற்சியில் இறங்கியுள்ளது.

யாத்திரிகர்களின் பயன் கருதி, பல்வேறு திட்டங்களின் விவரங்கள் கீழ்வருமாறு கொடுக்கப்பட்டுள்ளன.

## கருடாத்ரி நகர் குடில்கள் திட்டம்

இத்திட்டத்தின்கீழ் கட்டடத்தின் அடித்தளத்திலும், முதல் தளத்திலும் ஒவ்வொன்றும் 4 அறைத்தொகுதிகள் கொண்ட 16 குடில்கள் கட்டப்படும். ஒவ்வொரு அறைத்தொகுதியிலும் குளியலறை மற்றும் பொதுத் தாழ்வாரம் உள்ளடங்கிய 10 X 12 அடி என்ற அளவு கொண்ட அறை இருக்கும். 320 அடி சதுர அளவு கட்டட அறைகொண்ட ஒவ்வொருஅறைத்தொகுதிக்கான நன்கொடை ரூ. 30,000 மட்டுமே ஆகும்.

128 அறைத்தொகுதிகளில் 66 அறைத்தொகுதிகளுக்கான நன்கொடை ஏற்கெனவே பக்தர்கள் அளித்து விட்டார்கள்

8 அறைத்தொகுதிகளின் ஒரு தனிக்குடிலுக்கு ரூ. 2.4 இலட்சம் அல்லது 4 அறைத்தொகுதிகளுக்கு ரூ. 1.2 இலட்சம் அல்லது இரண்டு அறைத் தொகுதிகளுக்கு ரூ. 60,000/- என்ற வகையில் நன்கொடை அளிக்கலாம்.

## ராம் பகீச்சா விருந்தினர் விடுதிகள் திட்டம்

கோயிலின் வடகிழக்கு திசையில் ராம் பகீச்சாவில் மூன்று விருந்தினர் விடுதிகள் கட்டுவதென்று முடிவுசெய்யப்பட்டுள்ளது. ஒவ்வொரு விருந்தினர் விடுதியும் ஒவ்வொன்றும் 50 அறைத் தொகுதிகள் கொண்ட மூன்று தளங்களைக் கொண்டு விளங்கும். குளியலறை வசதியுடன் கூடிய 14 X 16 அடி அளவு கொண்ட அறைகளை ஒவ்வொரு அறைத்தொகுதியும் கொண்டு விளங்கும். 600 சதுர அடி கொண்ட இவை பொது தாழ்வாரம் ஒன்றினைக்கொண்டு விளங்கும். ஒவ்வொரு அறைத்தொகுக்கான நன்கொடை ரூ. 60,000/-ஆகும். மொத்தம் 450 அறைத்தொகுதிகளில், 37 அறைத்தொகுதிகளுக்கான நன்கொடை ஏற்கெனவே வழங்கப்பட்டுள்ளன.

## பயன்கள்

1. கட்டடத்தில், நன்கொடையாளர்களின் பெயர் பொறிக்கப்பட்டுள்ள கருங்கற் பலகை வைக்கப்படும்.

2. நன்கொடையாளர்கள் வருடத்தில் (ஜனவரி முதல் டிசம்பர் வரை) நன்கொடை அளிக்கப்பட்டுள்ள குடில்களில் ஒரு தடவை தங்கும்போது 10 நாட்களுக்கு மிகாமல், 60 நாட்களுக்கு இலவசமாகத் தங்கலாம்.

3. குடில்கள் ஒதுக்கப்படும்போது, நன்கொடையாளர்களின் உறவினர்களுக்கு முதலிடம் கொடுக்கப்படும்.

4. நன்கொடையாளர்கள் கேட்கும்போது, அவர்கள் பெயரில் உள்ள குடில்கள் காலியாக இல்லாவிடில், அவர்களுக்கு வேறு தங்கு வசதிகள் செய்து தரப்படும்.

# திருவுறப் பயந்தனள் திறங்கொள் கோசலை

இன்பத்தைக் குறியாக உடை யது உயிர் வாழ்வு. தத்தம் பொறி புல வளர்ச்சிக்கும் மலர்ச்சிக்கும் ஏற்ப உயிர்கள் இன்பம் உறுகின்றன எனினும் அவற்றின் இன்பங்கள் அவ் வற்றின் பொறி புல அளவுக்கும் ஆற்றலுக்கும் ஏற்ப கட்டுண்டுள்ளன. ஆனால் மானுடம் பிறவுயிர்களினின் றும் இவ்வகையில் இயல்பாகவே ஒரு படி உயர்ந்துள்ளது.

மானுட இன்பமும் பொறி, புல திட்ப, நுட்பங்களுக்கு ஏற்ப அமை வதே ஆயினும் பிற உயிரினும் அரிய தொரு கருவியாம். மனம் என்னும் ஒன்றை இம்மானுடம் பெற்று இருத் தலால் அப்பொறி புலன்களைக் கடந் தும் இன்புறவல்ல ஆற்றல் உடைய தாக அமைந்துள்ளது. மனப் பண் பாட்டிற்கு ஏற்பவே மானுடத்தின் இன்பம் அமைகிறது.

மனம் பண்படுவதற்கு இல்லற வாழ்வு ஓர் இயல்பான நெறியாகும். தன்னலமே, தன்னின்பமே இயல் பாகக்கொண்டு வளரும் மனிதமனம் காதல் துணையாலும் அதன் வழிக் கனிந்த குழந்தையாலும் பண்பட்டு, பரந்த எல்லை உடையதாக மலர் கிறது. அந்த அன்பு மலர்ச்சியே அருள் மணம் கமழ்ந்து இன்பத்தேன் பிளிற்ற வல்லது. இதனால்தான் திருவள்ளுவர் அன்புடைமையை இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணை நலம், மக்கட்பேறு என்னும் அதி காரங்களை அடுத்து அமைத்துள் ளார்.

குழந்தையன்பு மானுட இன்பத் திற்குத் தடையாகும் அனைத்துச் செருக்கையும் (அகங்காரம், மகங்கா ரங்கள்) அடியோடு அழிக்க வல்லன வாகும். கல்விச் செருக்கு, கலைச் செருக்கு, பொருள் செருக்கு, புகழ்ச் செருக்கு இவையெல்லாம்

''இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்க்கும்''

மயக்குறு மக்கள் முன், முனை மழுங் கிப் போகின்றன. அடித்து இன் புற்ற நெஞ்சம் குழந்தையின் அடிக்கு மகிழ்கிறது. கொடுத்துக் கொடுத்து இன்புற்ற மனம் குழந்தையிடம் கேட்டுக் கேட்டுப் பெறுதலில் இன் பம் காண்கிறது. தான் பேசுவதைப் பிறர் கேட்பதில் இன்பம் கொண்ட உள்ளம் குழந்தை பேசப் பேசக் கேட்டுக்கேட்டு இன்புறுகின்றது. பொருள் ஒவ்வொன்றையும் சிந் தித்து அதில் இன்பங்கண்ட சிந்தை பொருளற்ற மழலைச் சொற்களைக் கேட்பதில் இன்ப மடைகிறது.

கிருஷ்ணவதாரமும், இராமவதா ரமும் இந்த உண்மையை, வாழ்க் கைத் தத்துவத்தை உலகிற்கு உணர்த்தத் தோன்றியனவாகும்.

குழந்தையைப் பெறுதல் இன்ப மென்றால் அதனை வளர்த்தல் பேரின்ப மாகும். பெற்ற பாசத்தினும் பெரும் பாசம் வளர்த்த பாசம். அது சிறந் தது என்பதை உலகம் நன்கு அறியும். பெற்ற தாயாகிய நற்றாயினும், வளர்ப்புத் தாயாகிய செவிலித்தாய் தன் வளர்ப்பு மகளைக் காணுமல் தவித்த அன்புத் தவிப்பினை, அகத் திணை இலக்கியங்கள் அகம் நெகிழப் பாடும்.

கண்ணனைத் தேவகி பெற்றாள்; இன்பம் உற்றாள். ஆனால் சில விநாடி கள் கூட அக்கண்ணக் குழந்தையைக் கையில் ஏந்தி மகிழும், பாலூட்டி சீராட்டி மகிழும் பேரின்பம் பெற்றி லள் அவள். பிறந்த அப்போதே, அந்த இரவுப் போதிலேயே கண்ணன் யசோதையின் மகனாக ஆயர்பாடிக்கு எடுத்துச் செல்லப் பெறுகிறான். ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில் ஒருத்தி மகனாய் ஒளித்து வளருகிறான். வளர்க்கும் இன்பம், மழலைப் பேச் சும் குதலை மொழியும் கேட்கும் பேறு யசோதைக்கே வாய்க்கிறது. குழந்தைக் குறும்பும் சிறுவன் செய லும் காணும் காட்சிப்பேறு ஆயர் பாடியில் வாழும் அந்த ஆய்ச்சிக்கே வாய்க்கிறது.

அந்த ஆயர்பாடி ஆய்ச்சி பெற்ற இன்பத்தை, கண்ணன் பிறப்பால், வளர்ப்பால் பெற்ற இன்பத்தை பெரியாழ்வார் காப்பு, அச்சமுறுத் தல், செங்கீரை, தால், அமுதூட்டல் சப்பாணி, அம்புலி, பூச்சூட்டல் எனப் பல்வேறு அமைப்பில் பாடித்

டாக்டர். பொன். சௌரிராசன், M.A., Ph.d.,
திருப்பதி

துய்த்து நம்மையும் அனுபவிக்கச் செய்கிறார்.

குலசேகர ஆழ்வார் நெஞ்சோ இத் தகு வளர்ப்பு இன்பம் எதுவும் பெறாது வருந்தும் தேவகி நெஞ்ச நீர்மையைப் பெற்றுப் புலம்புகிறது.

'கண்ணா! ஆலைக்குத் தேர்ந்தெடுக் கும் இனிய, நீண்ட முற்றிய நற்கரும்பு போல் குழந்தைகளுக்குள் பேரின்பம நல்கும் பெறற்கரிய குழந்தையாகிய உன்னை, ''கண்ணா! கார் நிற வண்ணா! களிறே! ஏலவார் குழல் என் மகனே!'' என்றெல்லாம் தாலாட் டிப் பாடி மகிழும் பேறு பெற்றிடும் புண்ணியம் செய்தறியாத துயரில் கடையாய தாய் ஆனேனே!''

'மையெழுதிய கமலக் கண் இமை யை மேலே உயர்த்தி செந்தாமரை அடிகளைப் புறத்தே பொலியுமாறு கால்களை முடக்கி, சிறு கருமேகக்

குழவி தவழ்வது போலச் செஞ்சிறு விரல் ஐந்தும் பரப்பி அங்கைகள் இரண்டும் ஊன்றித் தவழும் காட்சியைக் காணப் பெற்றிலேன். ஓ கேசவா! பெண்ணுக ஏன் பிறந்தேன் யான்'

உறவும், அன்பும் ஒப்ப உடைய ஆயமகளிர் அனைவரும் தத்தம் தொடையின் மேல் உன்னை எடுத்து இருத்திக் கொண்டு, 'என் அப்பா! எங்கள் குலம் விளங்க வாய்த்த பெருஞ்சுடரே! அழகுமிகு மேகங்களின் குளிர்ச்சியையும், எழிலையும் கவர்ந்து திகழும் கண்ணு! உன் அப்பா யார்? எங்கே காட்டு பார்க்கலாம்?'' என்று கேட்ட போது—கேட்ட போதெல்லாம், நின் செவ்விய சுட்டு விரல்களினுலும், கரிய கடைக்கண்ணினுலும் சுட்டிக்காட்டும் பேற்றினை நந்தகோபன் பெற்ருன். (அதனைக் கண்டு யசோதை பூரித்துப் போனுள்) அய்யோ! நம் தலைவன் வாசுதேவன் அதனைப் பெற்றிலனே!

'நிலா மருவும் பொலிவோடு கூடிய நின் நெற்றியில் நெற்றிச் சுட்டி அசைந்தாட நீ யசோதைக்கு முத்தந் தருவாய்; நந்தகோபன் சிற்றத்தில் எப்படித் தோன்றுவான் என்று நடித்துக் காட்டி அவனை மகிழ்விப்பாய். இவற்றையெல்லாம் யசோதை பெறும் பேறு பெற்ருள். அந்த புண்ணியம் ஒன்றும் யான் செய்திலனே'

'' மருவி நின்திரு நெற்றியில் சுட்டி
அசைதர மணி வாயிடை முத்தம்
தருத லும்உன்றன் தாதையைப்
போலும்
வடிவு கண்டுகொண் டுள்ள
முள் குளிர
விரலைச் செஞ்சிறு வாயிடைச்சேர்த்து
வெகுளி யாய்நின்று ரைக்குமவ்
வுரையும்
திருவி லேனென்றும் பெற்றிலேன்
எல்லாம்
தெய்வ நங்கை யசோதை பெற்
றுளே ''

(நா. தி. பி - பெ. தி. 712)

'சின்னஞ்சிறு கைமுழுதினையும் பெத்தம் பெரிய தடாவின் அடிவரை இட்டுத் துழாவி வெண்ணை திருடும் மொட்டுப் போன்ற தாமரைச் சிறு கையும், அழகான தாம்புக் கயிற்ருல் யசோதை அடிப்பது போல் அடிக்க ஓங்கும் போது அஞ்சுவது போல் அஞ்சும் எளிமையும், வெண் தயிர் தோய்ந்து திகழும் செவ்விய இதழ்களும், அழுகையும் அஞ்சி நோக்கும் அச்சப் பார்வையும், அழகான வாயினை நெளித்துத் தேம்பும் நின்தேம்பல் சீர்மையும், யசோதைக்குப் பணிவது போல் தொழும் நின் தொழுகையும் கண்ட அசோதை எல்லையிலாப் பேரின்பத்தின் எல்லையைக் கண்டவள் ஆவாள்'

முழுதும் வெண்ணை யளந்து
தொட் டுண்ணும்
முழிழி ளஞ்சிறுத் தாமரைக்கையும்
எழில்கொள் தாம்புகொண்
டடிப்பதற் கெள்கும்
நிலையும் வெண்தயிர் தோய்ந்த
செவ் வாயும்

## சூரியன்-சந்திரன்

தஞ்சாவூர் தெற்கு வீதியில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ கலியுக வரதராஜ பெருமாள் ஆலயத்தில் நவக்கிரகங்கள் எழுந்தருளியுள்ளனர். பெருமாள் கோயிலில் நவக்கிரகம் இருப்பதும் ஒரு அதிசயம் ஆகும். இதில் சூரியனும் சந்திரனும் மேற்கு பார்த்து, பக்கத்து பக்கத்திலேயே இருப்பது பெரும் அதிசயமாகும். சூரியனையும் சந்திரனையும் ஒரு சேர தரிப்பதும் ஒரு அரிய வழிபாடாகும்.

திருச்சி வெள்ளரை, ஸ்ரீ புண்டகரிகாட்ச பெருமாள் ஆலயத்தில் ஸ்ரீ சூரியர், ஸ்ரீ சந்திரன், ஸ்ரீ இந்திரன், ஸ்ரீ மகாவிஷ்ணு ஆகியோர் ஒரே இடத்தில் இருந்து அருள்பாலிக்கிருர். இப்படிப்பட்ட அரிய தலத்தின் உள்ளேயே ஒரு சிறு திருக்குளமும் உள்ளது. மலைமேல் இருக்கும் இந்த ஆண்டவனை (திருமாலை) நாம் சென்று வழிபடுவதால் ஆரோக்கியம், ஆயுள், ஐஸ்வர்யம், அனைத்தையும் ஒருங்கே அடையமுடியும்.

---

## அரங்கனுக்கு அழகுக் கலசங்கள்

திருச்சி ஸ்ரீரங்கம் ஸ்ரீ அருள்மிகு அரங்கநாதப் பெருமானுக்கு கட்டப்படும் மிகப் பெரிய கோபுரத்தின் கலசங்கள் 12ம் குடந்தையில் இருந்து அணிவகுத்துச் சென்றன.

தெற்கு ராஜகோபுரத்திற்குக் கட்டப்படும் கோபுர கலசங்கள் 13ம் குடந்தை வணிகர் எஸ். ஆர். ஜி. அரங்கநாதன் செட்டியார் மனமுவந்து காணிக்கை செய்துள்ளார். இந்தக் கலசங்களை குடந்தையைச் சேர்ந்த கலியமூர்த்தி ஸ்தபதி என்பவர் செய்துள்ளார். கலசத்தின் உயரம் 10½ அடி. ஒரு டிரக்கில் 3 கலசங்கள் வீதம் 4 டிரக்கில் கலசங்கள் வைக்கப்பட்டிருந்தன. கலசங்கள் அலங்கரிக்கப்பட்டு, மக்கள் வழிபாடு செய்து பிறகு கலசங்கள் ஸ்ரீரங்கத்திற்கு அனுப்பி வைக்கப்பட்டன. இந் நிகழ்ச்சிஒரு பெரிய வைபவமாகவே குடந்தை, பாபநாசம், தஞ்சை ஆகிய நகரங்களில் நடைபெற்றன. கலசங்களும் வெள்ளோட்ட முறையில் அரங்கப்பெருமானுக்கு அனுப்பிய நிகழ்ச்சி அதிசயமானது.

தகவல்: பி. கலாநிதி-பாபநாசம்.

அழுகை யுமஞ்சி நோக்குமந்நோக்கும்
அணிகொள் செஞ்சிறு
வாய்நெளிப் பதுவும்
தொழுகை யுமிவை கண்ட வசோதை
தொல்லையின்பத்திறுதிகண்டாளே.
*(நா. தி. பி - பெ. தி. 715)*

இப்படி இப்படியெல்லாம் பலவாறு கண்ணனை வளர்க்கப் பெற்ற யசோதையின் நெஞ்சப் பெருமிதத்தை ஆழ்வார் எடுத்தியம்புகின்றார். கண்ண அவதாரத்தில் திருமாலைப் பெறும் பேறு ஒருத்திக்கு வாய்த்தது; வளர்க்கும் பேறு இன்னொருத்திக்கு வாய்த்தது.

பெறற்கரியஇவ்விருபெரும் பேறும் இராமவதாரத்தில் வாய்க்கப் பெற்றாள் கோசலை.

கோசலை இவ்வாறு பெற்று வளர்க்கும் பேறு பெற்றதால், 'மன்னுபுகழ் கோசலை தன் மணிவயிறு வாய்த்தவனே' 'கொங்குமலி கருங்குழலாள கோசலை தன் குல மதலாய்' 'புகழ்ச் சனகன் திருமருகா! தாசரதி!' 'தயரதன் தன் குலமதலாய்!' எனப்பெற்று வளர்த்துத் தம் குடி விளங்கும் சிறப்புத் தோன்ற தாலாட்டப் பெறுகின்றான் காகுத்தன்.

இத்தகு ஆழ்வார் திருவுள்ளக் கிடக்கையில் ஆழ்ந்து தோய்ந்தவர் மகாகவி கம்பர். கண்ணன் பிறப்பில் தனித்தனியாகத் தேவகியும் யசோதையும் பெற்ற, வளர்த்த சீர் இரண்டினையும் இராமவதாரத்தில் ஒரு சேரப் பெற்று மகிழும் பேறு வாய்க்கப் பெற்றவள் கோசலை என்று அவர் உள்ளம் உணர்கிறது. 'வளர்க்கும் திருவொன்றும் யான் பெற்றிலனே!' என்று தேவகி ஏக்கப் பெருமூச்சாக எழும் குலசேகரர் தொடர், கல்வியிற் சிறந்த கம்பர் நெஞ்சத்தில் ஆழப் பதிந்து விடுகிறது. தம் காப்பியத்தில் இடம்பெறும் கோசலா தேவி 'திருமாலைப் பெற்ற திருவும் பெற்றாள்; வளர்க்கும் திறனும் வாய்க்கப் பெற்றாள' எனப் பாடுகிறார் கம்பர்.

''ஒருபகல் உலகெலாம் உதரத்
துட்பொதிந்(து)
அருமறைக்(கு) உணர்வரும்
அவரை அஞ்சனக்
கருமுகில் கொழுந்தெழில் காட்டும்
சோதியைத்
திருவுறப் பயந்தனள் திறங்கொள்
கோசலை''



# திருமாலைத் தாள் பணிவோம்!

கவிஞர். செ. வெங்கடேசன்-சிந்தாமணியூர்.

அலையாடுங்கடல்மீது அரவத்தில் துயில்வோனை
மலர்க் கமலநாயகனை மாதவனை ஆதவனை
நீலநிறமுடையவனை நித்தியனை சத்தியனை
சீலன் திருமாலவனை ஸ்ரீதரனைத் தாள்பணிவோம்!

குழந்தையுருவாய் வந்து குவலயத்திற் பிறந்தவனைக்
குழலூதும் கண்ணனைக் கோகுலத்து நாயகனை
அழகிய மணவாளனை ஆண்டாளின் காதலனை
உலகளந்த பெருமாளை உத்தமனைத் தாள்பணிவோம்!

ஆயர்குலக் கொழுந்தை ஆராவமுதன் தன்னை
மாயமது சூதனனை மாடுகன்று மேய்த்தவனை
வாயினிற் பூவுலக வடிவங்காட்டி யோனைத்
தூயமணி வண்ணனை தாமோதரனைத் தாள்பணிவோம்!

கோவர்த்தன கிரியைக் குடையாகப் பிடித்தவனை
கோவிந்தனைக் காளிங்க நர்த்தனனை
தேவகியின் திருமகனை தேவாதி தேவனை
ஐவர்க்கு தூதுபோன ஐயனைத் தாள்பணிவோம்!

துரோபதைக்குச் சபையினில் துகில்வளரச் செய்தானை
இராதையின் மணாளனை இரத மோட்டிய சாரதியை
அர்ச்சுனனுக்கருள் செய்த அச்சுதனை அரியினை
முரளியை, முகுந்தனை முராரியைத் தாள்பணிவோம்!

மறைகளைக் காத்தவனை மச்சாவதாரியை
வராகமூர்த்தியை வானவர்த் தலைவனை
நரசிங்க மானவனை நாராயண மூர்த்தியை
பரசுராம பலராமரா யுதித்தோனைத் தாள்பணிவோம்!

ஆமையுரு எடுத்தவனை அமுதங் கொடுத்தவனை
வாமனனாய்ப் பிறந்தவனை வடவேங்கடத்தவனை
ராமனாய் உதித்தவனை ராவணனை வதைத்தவனை
தீமைகளை யொழித்தவனைத் திருமாலைத் தாள்பணிவோம்!

ஆதிமூலமானவனை ஆனைக்கருள் செய்தானை
வேதப் பரம்பொருளை, வெங்கடா ஜலபதியை
கீதை உரைத்தவனை குருவாயூர்க் கோமகனை
கோதண்ட பாணியினைக் கேசவனைத் தாள்பணிவோம்!

சாரங்க பாணியைச் சக்கரம் தரித்தவனை
ஸ்ரீரங்க நாதனைச் செம்பவள வாயானை
சீரார் செங்கமல, ஸ்ரீதேவி நாயகனைப்
பாராளும் பரமனைப் பராபரனைத் தாள்பணிவோம்!

திருமகளைத் தன்னுடைய திருமார்பில் வைத்தவனை
கருடனேறி வந்து காக்கும் கருணாகரனை
புருசோத்தமனெனும் புண்ணியனைப் பூரணனைத்
திருமலையி லருள்செய்யும் தெய்வத்தைத் தாள்பணிவோம்?

# ஸங்கல்ப ஸூர்யோதயம்

## நாடகத்தின் முக்கிய ரஸம்:

ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் முக்ய ரஸம் சாந்த ரஸமாகும். நாடக சாஸ்திரத்தில் ச்ருங்காரம், ஹாஸ்யம், கருணை, ரௌத்ரம், வீரம், பயங்கரம், பீபத்ஸம், அற்புதம் ஆகிய எட்டு ரஸங்களே உள்ளன. ஆகவே சாந்த ரஸத்திற்கு அவற்றில் இடம் இல்லை என்று ஓர் ஆட்சேபம் செய்யப்படுகிறது. (நாட்டிய சாஸ்திரம் 1-15 காவ்யமாலா) இது பரத முனியின் நாட்டிய சாஸ்திரத்தின் அபூர்ணமான பதிப்பை ஆதாரமாகக் கொண்டது. அதன் பூர்ணமான பதிப்பில் (Gaekwad) சாந்த ரஸத்தைச் சேர்த்து ரஸங்கள் ஒன்பதாகக் கணக்கிடப்பட்டிருக்கின்றன. நாட்டிய சாஸ்திரத்தின் வ்யாக்யானத்தில் அபிநவகுப்தர் சாந்த ரஸத்தை ஏற்றுக் கொண்டு அதைப்பற்றி விரிவாக எழுதியுள்ளார். உத்படாலங்காரம், த்வன்யாலோகம், த்வன்யாலோக வ்யாக்யானம் ஆகிய நூல்களிலும் சாந்தரஸம் விரிவாக உரைக்கப்பட்டுள்ளது. ஆசார்ய மம்மடரின் காவ்ய ப்ரகாசத்திலும், விச்வநாதரின் ஸாஹித்ய தர்ப்பணத்திலும், சார்ங்கதேவரின் ஸங்கீத ரத்னாகரத்திலும் சாந்தரஸம் கையாளப் பட்டுள்ளது. ஆகவே, அபூர்ணமான நாட்டிய சாஸ்திர நூல் பதிப்பைக் கொண்டு சாந்த ரஸத்தைத் தள்ள வொண்ணாது.

மேலும் சாந்த ரஸத்தை நாடகத்தில் நடித்துக் காட்டுவது முடியாத காரியமென்றும் ஓர் ஆக்ஷேபம் செய்யப்படுகிறது. அநாதிகாலமாக வித்வான்களும்கூட காம க்ரோதாதிகளால் தீண்டப்பட்டவர்களாயிருக்கிறார்கள். எனவே சாந்த ரஸத்தை வர்ணிக்கக் கூடிய கவியோ, நடித்துக் காட்டக்கூடிய நடிகரோ மிகவும் அரிது. ஆகையால் இதை நாடகத்தில் சேர்ப்பது அஸம்பாவிதம் என்பது ஆக்ஷேபம். இந்த ஆக்ஷேபத்திற்கு பதில் பின்வருமாறு: உபநிஷத்துக்களும் (ப்ரு. உப. 4-4-23), ப்ரஹ்ம ஸூத்ரங்களும் (3-4-27) நாம் நமது கீழ்ப்பட்ட ஸ்வபாவங்களை வென்று சாந்தியையும், தன்னடக்கம் முதலிய மேன்மையான குணங்களையும் வளர்க்க வேண்டுமென்று வற்புறுத்துகின்றன. ஆகவே, அவற்றைப் பின்பற்றி இத்துறையில் வெற்றி பெற்றவர்கள் கிடையவே கிடையாது என்று சொல்லவொண்ணாது. மேலும், சாந்த ரஸத்தை ஆதாரமாகக் கொண்ட பல்வேறு நூல்களையும் நாம் காண்கிறோம். ஸ்வாமி தேசிகன் மற்ற ரஸங்களிலுள்ள குறைபாடுகளை இந்த நாடகத்திலேயே (ஸங். ஸூ. 1-19) காட்டியுள்ளார். சாந்த நிலைக்கு முற்பட்ட படிகளையெல்லாம் நடித்துக் காட்ட முடியும், கடைசி நிலை நடித்துக் காட்ட முடியாது என்றால், ச்ருங்காரம், வீரம் முதலியவற்றிலும் அதே மாதிரி தான் நாடக மேடையில் அதைக் காட்டுவது அநாகரீகம், சுவையற்றது என்ற காரணத்தினால் அது விடப்படுகிறதல்லவா?

போஜ ராஜன் ச்ருங்காரமே முக்கிய ரஸமென்றும் (ச்ருங்கார ப்ரகாசம் 1-6), மற்ற ரஸங்கள் அதனின்றும் பெறப்படுபவை என்றும் அபிப்ராயப்படுகிறான். பவபூதியோ வென்றால், கருணையே முக்கிய ரஸம், அதற்குள் மற்ற ரஸங்கள் அடங்குகின்றன (உத்தர ராம சரிதம் 3-47) என்று கூறுகிறான். ஸ்வாமி தேசிகனோ, வென்றால் மற்ற ரஸங்களையெல்லாம் சாந்த ரஸத்துக்கு அநுகுணமாக வரைவதே உண்மை கவித்வத்தின் லக்ஷ்யமாகுமென்று ஸாதிக்கிறார் (ஸங். ஸூ 1-3, 4-57, 9-23, 10-40).

## நாடகத்தின் கதை:

இந்நாடகத்தில் வரும் முக்கிய பாத்ரங்களாவன:

விவேகன்–அரசன்
ஸுமதி–அரசி
வ்யவஸாயம்–தளபதி
தர்க்கம்–ஸாரதி
மஹாமோஹன்–அரசன்
துர்மதி–அரசி
காமன், க்ரோதன்–தளபதிகள்
ரதி–காமனின் மனைவி
ஸம்ஸ்காரம்–ஓவியன்
த்ருஷ்டப்ரத்யன்–தூதன்
ஸங்கல்பம்–பகவானின் தாஸன்
புருஷன் (ஜீவன்)–முமுக்ஷு (மோக்ஷத்தை விரும்புபவன்)
புத்தி–புருஷனின் மனைவி
விஷ்ணு பக்தி-பகவானின் தாஸன்
ச்ரத்தை, விசாரணை-ஸுமதியின் தோழிகள்

திரு. எல். ஸ்ரீநிவாஸன்,
டெல்லி.

குரு-ஸித்தாந்தம்
சிஷ்யன்-வாதம்
வஸந்தன்-காமனின் நண்பன்
ராகன், த்வேஷன், லோபன்-மந்திரிகள்
த்ருஷ்ணை-லோபனின் மனைவி
தம்பன், தர்பன்-மஹாமோஹனைச் சேர்ந்தவர்கள்
குஹனை-தம்பனின் மனைவி
அஸூயை-தர்பனின் மனைவி
ஸ்தம்பன்-மஹாமோஹனின் வேலையாள்
அபிநிவேசன்-பொக்கிஷதார்
துர்வாஸனை-பொக்கிஷதாரின் மனைவி.

இப்போது நாடகத்தின் வெவ்வேறு அங்கங்களின் சுருக்கம் கொடுக்கப்படுகிறது.

(29-ம் பக்கம் பார்க்க)

# பாவம் நீக்கும் புண்ணிய வாவி

महापातकयुक्तो वा युक्तो वा सर्वपातकैः ।
सद्यः पूतो भवेद्विप्राः स्वामितीर्थनिमज्जनात्॥

''மிகப் பெரும் பாவச் செய்கைகளைச் செய்தவனாக இருந்தாலும் அல்லது எல்லா பாவச் செய்கைகளையும் செய்தவனாயிருந்தாலும், அவன் திருமலையிலுள்ள ஸ்வாமி தீர்த்தத்தில் முறைப்படி ஒரு முறை நீராடுவதாலேயே தன் பாவங்கள் யாவும் நீங்கியவனாக ஆகி விடுகிறான்.''

சுயநலம் என்ற பாசத்தால் கட்டப்பட்டு, கொம்பிலே கட்டப்பட்டுள்ள பசு போல் உலகில் செயற் புரிந்து கொண்டிருக்கும் மனிதன் தவறுகள் செய்தல் இயல்பு. இத் தவறுகள் ஒருவனது சொந்த வாழ்விற்கும் சமுதாய வாழ்விற்கும் தீமை பயக்கும் ஆதலின் நம் முன்னோர் இவற்றின் விளைவுகளை எடுத்துக் கூறிக் கண்டித்துள்ளனர்; இவ் விளைவுகளினின்று தப்பிக்க சில வழி முறைகளையும் கூறியுள்ளனர். இவற்றையே நமது சாஸ்திரங்கள் பரிகாரங்கள் என்றும், பிராயச் சித்தங்கள் என்றும் கூறும்.

செல்வத்தின் பொருட்டும், மற்ற பல சுகங்களை அடையும் பொருட்டும் கண்மூடித்தனமாகத் தலை தெறிக்க ஓடிக் கொண்டிருக்கும் இன்றைய அணுயுக மனிதன் தெரிந்தே செய்யும் பல தவறுகளின் தீய பயன்களினின்று தப்பித்தல் என்பது எளிதான ஒன்றாகத் தோன்றவில்லை.

சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள பல வைதிகமான பரிகாரங்களும், பிராயச் சித்தங்களும் இன்றைய நிலையில் எளிதில் கடைப்பிடிக்கத் தக்கவையாயில்லை. அப்படியென்றால் ஒருவன் இன்று பாவத்தினின்று விடுதலை பெறுவது எங்ஙனம்?

இன்றைய மாந்தர்களின் பரிதாப நிலையை அன்றே உணர்ந்திருந்த பரம காருணிகர்களான நம் முன்னோர்கள் சில எளிய பரிகாரங்களையும் பிராயச் சித்தங்களையும் விதித்துள்ளனர். மிக எளிய முறையில் மிக மேலான நற்பயன்களை அளிக்க வல்ல சில உபாசனங்களையும் வழிபாட்டு முறைகளையும் அமைத்துள்ளனர்.

'பௌம க்ஷேத்ரங்கள்' என்று சொல்லப்படும் தலங்களை நிர்மாணித்தனர். மூர்த்தி, தலம், தீர்த்தம் என்று முறைப்படி வழிபட வழி வகுத்துக் கொடுத்தனர். இவ் வழிபாடு நல்கும் வியத்தகு நற்பயன்களையும் எடுத்துக் கூறினர்.

''எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம், உய்வில்லை செய்நன்றி கொன்ற மகற்கு'' என்ற தெய்வப் புலவனின் வாக்கு நன்றியறிதலின் மேன்மையையும் இன்றியமையாமையையும் எடுத்துக்காட்டும். தன் நலத்தின் பொருட்டு மற்றவர் நலன்களையும் பலியிடத்துணியும் அறிவு மயக்கம் கொண்ட சாதாரண மனிதன் செய்நன்றி மறத்தல் இயற்கை.

நன்மை தீமைகளை நாடியறிந்து நலம் புரியும் தன்மையுடைய நமது சாஸ்திரங்கள், இவன் பாவம் நீங்கவும் அரிய வழி ஒன்று கூறுகின்றன. அவர்கள் விதித்துள்ள வழிபாடு பாவம் நீக்குவது உறுதி என்பதைக் காட்ட ஒரு இதிகாசத்தையும் கூறியுள்ளனர். இது இன்றளவில் உண்மையாயிருப்பதை இன்றும் திருமலை வந்து, ஸ்வாமி தீர்த்தத்தில் நீராடி, பெருமாளை சேவித்து பாவம் நீக்கிக் கொள்ளும் பல்லாயிரக்கணக்கான மக்களின் இடைவிடா கூட்டத்தின் மூலம் அறியலாம்.

எதனையும் விஞ்ஞான முறையில் ஆராய்ந்து சரியான பயன் அளிக்குமா என்று தெரிந்துகொண்ட பின்னரே விளையாடும் இன்றைய தலைமுறையினர் அல்லும் பகலும் திருமலைக்கு விஜயம் செய்துகொண்டேயிருக்கின்றனர் எனின், இது இன்றும் இம்மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றும் உண்மையிலேயே பாவம் நீக்கி, புண்ணியம் அளித்து தூய்மைப்படுத்தும் ஆற்றல் மிக்கவையாயிருக்கின்றன என்பதை உறுதிப்படுத்துகின்றதல்லவா!

நைமி சாரண்யத்தில் கூடியிருந்த சௌனகர் முதலிய முனிவர்களுக்கு ஸ்ரீஸூத பௌராணிகர் ஒரு சமயம் உபதேசம் செய்து கொண்டிருந்தார்; திருமலையின் மகிமை பற்றியும், அங்குள்ள ஸ்வாமி தீர்த்தத்தின் பெருமை பற்றியும், வேங்கடத்து நாயகனின் ஒண் மலர்ச் சேவடிகளின் ஏற்றமும் எடுத்துரைத்தார். மேன்மேலும் கேட்க விருப்பங்கொண்ட முனிவர்கள் திருவேங்கடத்திலுள்ள ஸ்வாமி தீர்த்த வைபவத்தை எங்களுக்கு இன்னும் நன்றாக எடுத்துரைக்க வேண்டும் என்று வேண்டிக்கொண்டனர். ஸ்ரீஸூதரும் மிக்க மகிழ்வுடன் ஸ்வாமி தீர்த்தத்தின் வைபவங்களை எடுத்துரைத்தார்.

भूयोऽपि संप्रवक्ष्यामि स्वामितीर्थस्य वैभवम् ।
युष्माकमादरेणाऽहं नैमिशारण्यवासिनः ॥

நன்றி கொன்ற பாவத்தால் ஒரு மன்னன் பைத்தியம் பிடித்தவனாகத் திரிந்து, பின் முனிவர்களின் ஆலோசனையின் பேரில் திருமலை வந்து, ஸ்வாமி தீர்த்தத்தில் நீராடி, பாவம்

திரு. ந. இராமன்—கும்பகோணம்.

மான இதிகாசத்தைக் கூறத் துவங்கினார்.

ஸோம வம்சத்தில் உதித்த நந்தன் என்ற மன்னன் அறநெறி வழுவாமல் அரசு புரிந்து வந்தான். இவனுக்கு தர்மகுப்தன் என்ற பெயருடைய ஒரு மகன் இருந்தான். தர்மகுப்தன் அரசுரிமை ஏற்பதற்குரிய வயது அடைந்தவுடன் நந்த மன்னன் இவனிடம் அரசை ஒப்படைத்துவிட்டு வானப்பிரஸ்தாசிரமத்தை மேற்கொண்டவனாக நாடு துறந்து காடு சென்று வசிக்கத் துவங்கினான். புலன்களையெல்லாம் அடக்கியவனாக தவத்திலேயே நேரத்தைக் கடத்திக் கொண்டிருந்தான்.

தர்மகுப்தனும் அறநெறி பிறழாமல் செவ்வனே ஆண்டு வந்தான். பல யாகங்கள் செய்தான். அந்தணர்களுக்கு பசுவும், பொன்னும், நிலமும் அளவில்லாது வழங்கினான். இவனது ஆட்சியில் அனைவரும் தத்தம் கடமைகளினின்று சிறிதும் வழுவாமல் செயற்புரிந்து வந்தனர்.

அரசாட்சி அமைதியாக நடந்து கொண்டிருந்தபோது ஒரு சமயம் நாட்டில் களவு அதிகமாயிற்று. மக்களிடையே கள்வர்களைப் பற்றிய அச்சம் அதிகமாகப் பரவிற்று. இதனையறிந்த மன்னன் கள்வர்களை அடக்க எண்ணி தானே முயன்றான். ஒரு நாள் தன் பட்டக் குதிரையின் மேல் ஏறிக்கொண்டு எல்லைப் புறத்திலுள்ள காட்டினுள் கள்வர்களைப் பிடிக்கும் பொருட்டுச் சென்றான். ஊழ் உந்து தள்ள, விதி முன்னே இழுக்கச் சென்றான் மன்னன்.

காட்டினுள் சென்றதும் அரச வம்சத்திற்கே உரிய இயல்பின் காரணமாக இவனுக்கு வேட்டையாடுவதில் மிகுந்த ஆர்வம் எழுந்தது. பகல் முழுவதும் திரிந்து வேட்டையாடிய மன்னன் தன் படை வீரர்கள், மெய்காப்பாளர்கள் அனைவரையும் பிரிந்து தனியே வெகு தூரம் வந்துவிட்டான். மாலை நெருங்கவும் மிக்க களைப்படைந்தவனாக பசுமையான மரங்களும் சோலைகளும் அடர்ந்துள்ள ஒரு குளக்கரையை அடைந்தான். களைப்பு நீங்கியதும் ஸந்தியா வந்தனம் செய்தான். காயத்ரீ ஜபம் செய்தான்.

राजाऽपि पश्चिमां सन्ध्यामुपास्य विनयान्वितः।
जजाप च वने तत्र गायत्रीं वेदमातरम् ॥

இரவு நெருங்க நெருங்க, புலி, சிங்கம் முதலிய கொடிய விலங்குகளின் உறுமல்கள் எழத் துவங்கின. இது கேட்ட மன்னன் இரவில் தரையில் தனித்து இருத்தல் ஆபத்து என்றறிந்து அருகிலிருந்த ஒரு பெரிய மரத்தின் மீது ஏறி அமர்ந்தான்.

சிறிது நேரம் சென்றவுடன் சிங்கத்தினால் துரத்தப்பட்ட ஒரு கரடி அம்மரத்தின் மீது ஏறி வந்தது. மகாத்மாவும் சிறந்த வீரனுமான தர்ம குப்தனை அங்குக் கண்டது.

आरुह्य ऋक्षो वृक्षं तं ददर्श जगतीपतिम् ।
वृक्षस्थितं महात्मानं महाबलपराक्रमम् ॥

தன் வரவைக் கண்டு பயந்த மன்னனைப் பார்த்து கரடி, "மன்னா! பயங் கொள்ளாதே! வனத்தில் திரியும் நான் நாட்டு வாசியான உனக்கு ஏதும் தீங்கு செய்ய மாட்டேன். இன்றைய இரவை இங்கு பயமின்றி கழிப்பாயாக", என்று கூறி மேலும் கூறியது :

"மன்னவனே! இம்மரத்தின் அடியில் என்னைக் கொன்று புசிக்கக் காத்திருக்கும் சிங்கம் மிக்க வலியுடைய கொடிய பிராணி. அது இப்போது நம்மிருவருள் ஒருவரை உண்பதில் குறியாயிருக்கிறது. எனவே, நாம் ஒரு உடன்பாடு செய்து கொள்வோம். இந்த இரவின் முதற் பாதியில் நீ தூங்கு! நான் விழித்திருந்து உன்னைக் காக்கிறேன். இரவின் பின் பகுதியில் நான் உறங்குகிறேன். நீ விழித்திருந்து என்னைக் காக்கலாம். இவ்வாறு நாம் இன்றைய இரவை கிழேநமுகும் சிங்கத்துக்கு இரையாகாமல் கழிப்போம்".

கரடியின் வார்த்தைகளால் பயம் தெளிந்த மன்னன் அதன் ஆலோசனையை ஏற்றுக் கொண்டான்.

राजपर्व भज निद्रां त्वं रक्ष्यमाणो मयोत्तमः।
ततः प्रसुप्तं मां रक्ष शर्वर्यर्धं महामते ॥

மன்னனும் கரடியின் மடியில் தலை வைத்தவனாக சிறிது நேரத்தில் உறங்கிப் போனான். இக்காட்சியைக் கண்டு வெகுண்ட சிங்கம் கரடியை நோக்கி இவ்வாறு கூறிற்று.

'நண்பனே! நீ விலங்குகளில் சிறந்தவனன்றோ! உன் மடியில் உறங்கும் மனிதன் நம்மை வேட்டையாட வந்தவன். எனவே அவனை எனக்கு அளித்துவிட்டு, நீ உயிர் பிழைப்பாயாக", என்று கூறிற்று.

இதனைக் கேட்டு வியந்த கரடி, "விலங்குகளின் தலைவனே! தாங்கள் அறவழி அறியமாட்டீர்களா? நம்பிக்கைத் துரோகம் செய்தல் மிகக் கொடிய பாவம் அல்லவா. கோடிக்கணக்கான யாகங்கள் செய்தாலும் இப்பாவம் விலகாதே.

विश्वासघातिनां लोके महाकष्टंभवत्यहो।
नहि मित्रद्रुहां पापं नश्येद्यज्ञायुतैरपि ॥

பிரம்மஹத்தி முதலிய பாவங்களை எப்போதாகிலும், எவ்வகையாலேனும் நிவர்த்தி செய்து கொள்ளலாம். நன்றி கொன்ற பாவத்திற்கு கோடி பிறவிகள் எடுத்தாலும் நிவர்த்தி கிடையாது என்பது ஆன்றோர் வாக்கன்றோ!

ब्रह्महत्यादि पापानां कथंचिन्निष्कृतिर्भवेत्।
विश्वासघातिनां पापं न नश्येज्जन्मकोटिभिः॥

நம்பிக்கைத் துரோகம் செய்பவன் பிறகு உலகில ஏன் வாழ வேண்டும்? இவன் உலகிற்கே ஒரு சுமையல்லவா, மக்கட் பதடி யல்லவா. எனவே நான் மன்னனை விட மாட்டேன்" என்று கூறிற்று.

கரடியின் இப் பதிலைக் கேட்ட சிங்கம் நமது முயற்சி இதனிடத்து

இருந்து விட்டது.

நடு இரவு கழிந்த பின் மன்னன் விழித்துக் கொண்டான். கரடி உறங்கத் துவங்கிற்று. கரடி உறங்கியதை உறுதிப்படுத்திக் கொண்ட பின் சிங்கம் மன்னனை விளித்துப் பேசிற்று.

'அரசே! தாங்கள் அறம் ஓம்பும் ஆன்றோர் மரபில் வந்தவர், நெறி தவறாது அரசு புரிகிறீர். தங்களை அண்டியிருக்கும் கரடி, தங்களால் வேட்டையாடப்படும் பிராணி. தங்கள் எதிரி. அது தங்களை எந்நேரமும் கொல்ல முயலலாம். தங்கள் உயிரை இவ்விலங்கை நம்பி ஒப்படைத்திருக்கிறீர்களே. தங்கள் உயிரை நாடே நம்பியிருக்கிறதே. எனவே கரடியை என்னிடம் ஒப்படைத்துவிட்டுத் தாங்கள் தப்பிச் செல்லுங்கள்''.

மன்னன் இவ்வுரையைக் கேட்டான். உயிரின் மேல் ஆசை மேலோங்கியது. சுயநலம் அறிவுக் கண்ணை மறைத்தது. அறம் எது, அறம் அல்லாதது எது என்பதைப் பகுத்து அறியுந் திறனை இழந்தான். தேக பாசம் நேசம் மறக்கத் தூண்டியது. தன்நிலை மறந்தான் மன்னன்.

தன் உயிரின் மேல் கொண்ட நேயத்தால் தன்னை நம்பி, தன் மடியில் உறங்கிக் கொண்டிருந்த கரடியை விலங்கென்றும் பாராமல் கீழே தள்ளிவிட்டு விட்டான். ஆனால் உண்மையில் கீழே விழுந்தவன், பதிதனானவன் மன்னனே!

स्वाङ्कन्यस्तशिरस्कं तमृक्षं तत्याज भूतले ।
पात्यमानस्ततो राज्ञा समालम्बितपादपः ॥

புண்ணிய வசத்தால் கரடி கீழே விழாமல் நடுவில் இருந்த ஒரு கிளையில் தொற்றிக்கொண்டு விட்டது. தன்னைக் கீழே தள்ளிய மன்னனைப் பார்த்துக் கடுங்கோபத்துடன் பேசத் துவங்கியது.

விலங்கென்றும் பாராமல் என்னைக் கீழே தள்ளினாயே. நான் யார் தெரியுமா? பிருகு வம்சத்தில் தோன்றியவன். என் பெயர் தியான காஷ்டன். சாபத்தால் நான் கரடி வடிவங் கொண்டவனாக ஆகி விட்டேன்.

कामरूपधरो राजन्नहं भृगुकुलोद्भवः ।
ध्यानकाष्ठाभिधो नाम्ना ऋक्षरूपमधारयम् ॥

ஒரு தீங்கும் செய்யாத எனக்கு இப்படியொரு தீங்கு செய்து விட்டாயே. இப்பாவம் உன்னைச் சும்மா விடாது.''

''உன்னை முழுமையாக நம்பிய எனக்கு இப்படித் துரோகம் நினைத்தாயே. ஆசை வயப்பட்டவனாகத் தன்னை மறந்து இக்கொடிய வஞ்சகம் புரிந்த நீ மிக விரைவில் தன்னை மறந்து திரியும பைத்தியமாக ஆகக் கடவாயாக'' என்று கரடி சாபமிட்டது.

मच्छापादतिशीघ्रं त्वमुन्मत्तश्चर भूतले ॥

அரசனை சபித்த பின் சிறிது சினந் தணிந்த தியான காஷ்டன் என்ற கரடி, சிங்கத்தின் முந்தைய வரலாறு கூறி, அதற்கு சாப விமோசனமளித்து தடைப்பட்ட தியானத்தைத் தொடரச் சென்றது.

ध्यानकाष्ठेन संवाद ऋक्षरूपेण ते यदा ।
तदा निर्धूय सिंहत्वं यक्षरूपमवाप्स्यसि ॥

கரடியால் சபிக்கப்பட்ட தர்மகுப்தன் சித்தம் கலங்கியவனாகத் தன் நிலை மறந்து காட்டில் திரிந்து கொண்டிருந்தான். இவனைக் காணாது நாற்புறம் தேடி வந்த, மந்திரியை முன்னிட்ட காவலர்கள் மன்னனைக் கண்டு மகிழ்ந்தனர். உடனே இவன் நிலை கண்டு கலங்கினர். ஏதும் செய்வது அறியாது திகைத்த மந்திரி காட்டில் தவம் புரிந்து கொண்டிருந்த நந்த மன்னனுக்குச் செய்தி அனுப்பி அழைத்து வரச் செய்தார். மைந்தனின் நிலை கண்டு கதி கலங்கி நின்றான் மன்னன். மைக்கான காரணத்தை அறிந்தான். எனினும் இப்பாவம் தொலைக்கும் வழி அறிந்தானில்லை. இறுதியில் ஜைமினி முனிவரை அடைந்தான்.

भगवञ्जैमिनेः पुत्रो ममाद्योन्मत्ततां गतः ।
अस्योन्मादविनाशाय ब्रूह्युपायं महामुने ॥

முனிவரைப் பணிந்தான். கண்கள் சோர தன் மைந்தன் பைத்தியமாகி விட்டதைக் கூறினான். அது நீங்க ஒரு உபாயம் கூற வேண்டும் என்று வேண்டி நின்றான். இது கேட்ட முனிவர் சிறிது நேரம் தியானத்தில் ஆழ்ந்தார். தியான காஷ்டனுடைய சாபத்தால் மன்னன் மகன் பெற்றிருந்த தண்டனையை அறிந்தார். மற்ற முனிவர்களுடன் கூடி ஆலோசித்து இச்சாப விமோசனத்திற்கு வழி கண்டார்:

''மன்னா! நான் கூறுவதைக் கவனமாகக் கேள். தென்னாட்டில் சுவர்ணமுகி நதியின் கரையில் பாவங்களை நீக்கும் திருவேங்கடம் என்ற மலை உள்ளது. பல வித அரிய மூலிகைகளால் சூழ்ந்த விண்ணகரத்தை உடையது. பாவம் நீக்கி புண்ணியமளிக்கும் பரம பாவன க்ஷேத்ரம் இது. இங்கு ஆய்ச்சி பாலுண்டு மேய்ச்சி முலைகொண்ட ஆலிலைப் பாலகன் திவ்ய மங்கள வடிவத்துடன் விளங்குகிறான். இத்திருவிண்ணகரத்திற்கு அருகே 'ஸ்ரீ ஸ்வாமி புஷ்கரிணி' என்ற பெயருடைய மிக உயரிய வாவி ஒன்று உளது. இது பவித்ரமான தீர்த்தங்களுக்குள் பரம பவித்ர தீர்த்தம்; மங்கலம் அளிப்பனவற்றுள மிக சிரேஷ்டமான ஸாயுஜ்ய முக்தியளிக்கும் சுப மங்களா தீர்த்தம்.

स्वामिपुष्करिणी चेति तीर्थमस्ति महत्तरम् ।
पवित्राणां पवित्रं हि मङ्गलानां च मङ्गलम् ॥

சுருதி, ஸ்மிருதிகளாலே தீர்மானிக்கப்பட்ட பிரம்மஹத்தி முதலிய

28-ம் பக்கம் பார்க்க:

#   ஸ்ரீ முஷ்ணம்  

ஸ்ரீ முஷ்ணத்திலுள்ள ஸ்ரீ பூவராஹப் பெருமானின் திருக்கோயிலின் வரலாறும் அமைப்புகளும்:

சன்னிதி மேற்கு பார்த்தது. மூன்று அடுக்குடன் உள்ள விமானத்துடன் கூடிய கர்ப்பக்ருஹம் சுமார் 15 அடி சதுரத்தில் அமையப் பெற்று அர்த்த மண்டபத்தையும் கொண்டது. இவைகளைச் சுற்றி திருவெண்ணாழிகை என்கிற முதல் பிராகாரம், இரண்டு அரடா மண்டபத்துடனும், ஒரு திறந்த முற்றத்துடனும் கூடியது. இதை அடுத்து 24 கால்கள் கொண்ட காயத்திரீ மண்டபம் என்கிற மஹா மண்டபம் உள்ளது. இவைகளைச் சுற்றி மதிளும், நுழைவு வாசலும், அதற்கு மேல் ஒரு சின்ன கோபுரமும் உள்ளது. இதற்கு எதிரே புருஷசூக்த மண்டபம் என்கிற 16 கால் மண்டபம் உள்ளது. இது அபூர்வமான வேலைப்பாடுகளுடன் கூடியது. இதன் எட்டுத் திக்குகளிலும் திக் தேவதைகளான இந்திரன், அக்னி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன், அவரவர்களுக்குரிய வாஹனங்களுடனும், ஆயுதத்துடனும் நிர்மாணிக்கப் பட்டுள்ளனர். இம்மண்டபம் மேல் திசையில் கருடன் சன்னிதி உள்ளது. அதற்கு மேற்கே தஞ்சாவூர் சரபோஜி மஹா ராஜாவால் கட்டப் பட்ட நூறு கால் மண்டபம் வெகு உன்னதமாகவும், விசாலமான நடுப் பத்தியுடன் கூடியது.

இவைகள் எல்லாவற்றிலும் சுற்றி ஒரு மதிளும், மேற்கே கம்பீரமான 7 நிலைகளுள்ள சுமார் 120 அடி உயரமுள்ள ராஜ கோபுரமும், வடக்கு மதிளின் மத்தியில் ஐந்து நிலைகளுள்ள வைகுண்ட துவாரம், சுவர்க் வாசல் என்கிற திருவாசலும் அமையப் பெற்றது. ராஜ கோபுரத்துக்கு உட்பட்ட பிராகாரங்களில் ஆண்டாள், உடையவர், வேணுகோபாலன், ஸேனை முதலியார், ஸ்வாமி தேசிகன், திருமங்கை மன்னன், ஸ்ரீமந் மணவாள மாமுனிகள், திருக்கச்சி நம்பிகள் ஸன்னிதிகள் மதிளை ஒட்டினாற்போல் அமைந்திருக்கின்றன. இந்த பிராகாரத்தில் ஆக்னேய பாகத்தில் திருமடப் பள்ளியும், நிருதி பாகத்தில் தனிக் கோயிலில் நாச்சியார் சன்னிதியும் உள்ளது. நாச்சியார் சன்னிதி கர்ப்பக்ருஹ, அர்த்த மண்டப, மஹா மண்டப, டோலை மண்டபத்துடன் கூடியது. இந்தப் பிராகாரத்தில் நந்தவனங்கள் அமைத்திருக்கிறார்கள்.

இந்தப் பாழடைந்த மூன்றும் பிராகாரத்தில் வடக்குப் பாகத்தில் அகஸ்தியப் பிரா்தா என்கிற ரிஷியால் அமைக்கப் பெற்ற சக்ரவர்த்தித் திருமகனார் சன்னிதி இருக்கிறது. இங்கே இராமன் பட்டாபிஷேகக் கோலத்துடன், இராமன், சீதை இருவரும் வீற்றிருந்த திருக்கோலத்துடனும், திருவடிகளில் பாதுகை சமர்ப்பித்துக் கொண்டு எழுந்தருளியிருக்கிறார்கள். பரத சத்ருக்னன், லக்ஷ்மணனும் நின்ற திருக்கோலத்துடனும், ஹனுமார் மண்டி போட்டுக் கொண்டு, ஸ்ரீ ராமாயண புஸ்தகத்துடன் ஸேவை ஸாதிக்கிறார். ஆனால் சக்கரத்தாழ்வார், மத்ஸ்யாவதாரம், கூர்மாவதாரம், பலராமாவதாரம் இவைகள் இங்கு இருப்பது வியக்கத் தக்கதாகும். இப்பிராகாரத்தில் ராஜ கோபுரத்துக்கு சுமார் 100 அடி மேற்கு இருப்பது ஒரு பெரிய கருட ஸ்தம்பம். சுமார் 40 அடி உயரமுள்ளதும், மேலே ஒரு சிறிய திருக் கோயில் அமைக்கப்பட்டதும், அதினுள்ளே கருடாழ்வார் பிரதிஷ்டிதமாயும் அமையப் பெற்றது ஆச்சர்யமாகும். திருவேங்கட முடையான்

கோ. க. வா. கோவிந்தராஜ
பாவனுசார்யா ஸ்வாமி.
ஸ்ரீரங்கம்.



யாக சாலை

தில், கீழ்புரம் வடவண்ட பாகத்தில், கோபுரத்திலேயே சுமார் 15 அடி உயரத்தில் அமைக்கப் பெற்றது. திருமலைக்குப் போகும் யாத்திரிகர் கள் முதலில் வராஹப் பெருமானை ஸேவித்து விட்டு, ஸ்ரீநிவாஸனை ஸேவிக்கும் பிரகாரம் இங்கே முத லில் திருவேங்கடமுடையானை ஸேவித்து விட்டு பின்னர்தான், ஸ்ரீமுஷ்ண க்ஷேத்திரநாதனை ஸேவிக்க வேண்டும் என்கிற நிபந்தனை உண்டு. ஆண்டாள் சன்னிதி கிழக்கு பார்த் தது. கர்ப்பக்ருஹ அர்த்த மண்டபத் துடனும், ஆனால் இரண்டுக்கும் பொதுவான மகா மண்டபமும் கூடிய நிர்மாணம் ஆச்சரியத்தை உண்டு பண்ணுகிறது. உடையவர் சன்னிதி யும் மேற்கு பார்த்து அமைந்திருப் பதும், அதுவும் ஆண்டாள் சன்னிதி யிலேயே அமைந்து இருப்பதும் மிக வும் ஆச்சர்யமாகும். ஆண்டாளின் மனோரதத்தை பூர்த்தி பண்ணி வைத்த உடையவரும், அந்த உடை யவருக்கு திருப்பாவையிலுள்ள விசேஷ அபிநிவேசத்தையும், இந்த சன்னிதிகள் நிர்மாணத்தால் யூகிக்க இடம் அளிக்கிறது. திருவாசலுக்கு கிழக்கே ஒரு ஸப்த கன்னிகைகள் கோயில் அமைந்திருக்கிறது. இந்த ஏழு கன்னிகைகளும், பெருமாளின் திருக்கல்யாணத்துக்குப் பின்னர், ஸ்ரீ அம்புஜ வல்லியுடன் தோழிகளாக வந்ததாக ஐதிஹ்யம். பிள்ளை வரம் வேண்டுபவர்கள், இந்த சன்னிதியில் பழம் நிவேதனம் பண்ணி, தீபாரா தனை பண்ணி சகுனம் கேட்பார்கள். பல்லி (கவுளி) சொன்னால் இஷ்ட ப்ராப்தி உண்டு. பல ஜனங் கள் இந்த சன்னிதிக்கு பிரார்த்தனை செலுத்துகிறார்கள் வருடத்தில் பங்குனி உத்திரத்துக்கு முன் கூட் டியே இந்த அம்மனுக்கு ஒரு பத்து தின உத்ஸவம் உண்டு.



திருவேங்கடமுடையான் சன்னதியும், கருடஸ்தம்பமும்.

ஸ்ரீ முஷ்ணம் செங்குந்தர் வீதியி லுள்ள செங்குந்தர் இனத்தார் களுக்கு இச்சன்னிதியில விசேஷ அபி மானம் உண்டு. நித்தியப் படியில் முதலியார் பூஜை. ஆனால் உத்ஸவம் 10 நாட்களிலும், தினம் அபிஷேக, பூஜை, ஆராதனைகள் எல்லாம் பிரா மணர்களுடையது. செங்குந்தர்களில் ஐந்து பேர்கள் முதல் நாள் முதல் 10 தினங்களிலும் விரதம் இருப் பார்கள். தங்கள் இல்லத்தில் இதற்கு என்று ஒதுக்கப்பட்ட அறை யில், பகல் சுமார் 20 நாழிகைக்கு மேல் பூஜைகளை முடித்துக் கொண்டு, கையில் வில் ஏந்தி மேளதாளத் துடன் புறப்பட்டு, திருவீதியில் வலம் வருகையில், வடக்கு வீதியில் சன்னிதி திருவாசல் வழியாக உள்ளே சப்த கன்னிகை சன்னிதிக்கு வருவார்கள். அவர்களுக்கு ஆவேசம் வந்து அதி மானுஷ சேஷ்டைகளுடன் ஆடுவார் கள். பின்னர் சாந்தமடைந்தவுடன், பாக்கி வீதி சென்று தங்கள் இல்லத் துக்குப் போவார்கள். அம்மனுக்கு வேண்டுகோள் செய்து பல, பல வேஷங்கள் போட்டும், கடைசி தினம் சுடல் குத்திக் கொண்டும் பல பேர் கள் வருவார்கள். எல்லோரும் பிர மிக்கும்படி சம்பவங்கள் நடை பெறும்.

கோயிலின் முக்கிய சன்னிதி ஸ்ரீ பூவராஹஸ்வாமி சன்னிதி. கர்ப்ப க்ருஹத்தில் மத்தியில் நின்ற திருக் கோலத்தில் மேற்கு நோக்கி நின்று

கொண்டு, முதலை மட்டும் மேற்கு நோக்கிச் சற்று உயர்த்தியும் இடுப்பில் இருகைகளிலுள்ள சங்கு சக்கரத்தை மறைத்து வைத்துக் கொண்டும், கம்பீரமாகப் பார்க்கிறார் மூல மூர்த்தி. மூலவர் சாள க்ராம மூர்த்தி. விமானம் பாவன விமானம். ஸ்ரீபூவராஹ ஸ்வாமியின் பக்கத்தில் ஏகாஸனத்தில், ஸ்ரீதேவி பூதேவி தேவிகள் நின்ற திருக்கோலத்துடன் ஸேவை ஸாதிக்கிறார்கள். வாக்தேவியான சரஸ்வதி பாகம் பண்ணுவதாகவும், பிரம்மா பூஜை பண்ணுவதாகவும் ஐதிஹ்யம்.

கருவறைக்கு முன்பு அர்த்த மண்டபத்தில் வட பார்சுவத்தில் மேற்கு பார்த்து உத்ஸவமூர்த்தி யக்ஞ வராஹமூர்த்தி ஸ்ரீதேவி, பூதேவியுடன் ஆஸ்தானமாக உள்ளார். அம்புஜவல்லித் தாயாரின் வேண்டுகோளுக்கு இணங்கி, அழகு வாய்ந்த திருக்கோலமாக, பிரும்மயாகத்திலிருந்து அவதரித்தார். துலுக்க கலாப காலத்தில் ஸகல உத்ஸவ மூர்த்திகளும் பாதுகாப்புக்காக, வேறு இடங்களுக்குக் கொண்டு போன சமயத்தில், இங்கு உத்ஸவம் நடத்த ஒரு உத்ஸவமூர்த்தி ஸ்ரீதேவி பூதேவி சஹிதமாகவும், தனிக் கோயில் நாச்சியாருடனும் பிரதிஷ்டை பண்ணி, போகங்கள் எல்லாம் கண்டருளின மூர்த்திகளுக்கு, மஹா மண்டபத்தில் ஒரு தனி சன்னிதி அமைக்கப் பெற்று, இவருக்கு பஞ்ச பர்வ புறப்பாடுகள் மட்டில் உண்டு.

ஸ்ரீமுஷ்ணம் ஒரு பிரார்த்தனை ஸ்தலம். இப்பிராந்தியத்திலுள்ள புதியதாக மணம் புரிந்து கொண்ட தம்பதிகள் அரசப் பிரதக்ஷிணம், ஸ்ரீ பூவராஹப் பிரதக்ஷிணம் பண்ணின பிறகுதான் இல்லற வாழ்க்கை துவங்குவது வழக்கம். மேலும் பிள்ளை வரம் வேண்டுபவர்கள், 48 நாட்கள், அல்லது 24 நாட்கள், அல்லது 12 நாட்கள், அல்லது 6 நாட்கள் அல்லது 3 நாட்கள் தினமும் புஷ்கரிணியில் ...

...துடன் நீராடி, அங்குள்ள அச்வத்த பிரதக்ஷிணம் 108 தடவை பண்ணிவிட்டு, ஸ்ரீ பூவராஹன் சன்னிதி, தாயார் சன்னிதி, குழந்தையம்மன் என்கிற ஸப்த கன்னிகை சன்னிதி இவைகளை சுற்றி 12 தடவை பிரதக்ஷிணமும், மாலையில் அச்வத்த பிரதக்ஷிணம் 12 தடவையும், இங்கே 3 தரமும் பண்ணி, அர்ச்சனை பண்ணி, இப்படி, (3, 6, 12, 24, 48) தினங்கள் பண்ணி, ஸந்தான கிருஷ்ணன் ஏள்ளப் பண்ணிக் கொண்டு பூர்த்தி பண்ணுபவர்களுக்கு நிச்சயமாக இஷ்டப் பிராப்தி உண்டாகிறது. ஏராளமான ஜனங்கள் அமாவாசை தினங்களிலும், மற்ற விசேஷ தினங்களிலும் வருகிறார்கள்.

மாசி மாதத்தில் பிரம்மோத்ஸவம் ஸ்ரீமுஷ்ணத்தில் ஏழு தினங்கள் நடக்கும். 9ஆம் நாள் கீழ் சமுத்திர தீர்த்தவாரி நடைபெறுகிறது. சித்திரையில் இந்திரன் பண்ணி வைத்த உத்ஸவம். சித்திரா பௌர்ணமியில் தீர்த்தவாரி நித்திய புஷ்கரிணியில் நடைபெறுகிறது. ஸ்ரீமுஷ்ணத்திலுள்ள நித்திய புஷ்கரிணிக் கரையிலுள்ள அச்வத்த மரம் விருக்ஷரூபமாக வராஹன் ஸேவை சாதிப்பதாக ஐதிஹ்யம் உள்ளதால் பகல், இரவு எந்த நேரங்களிலும் பிரதக்ஷிணம் பண்ணலாம். இம்மரத்தின்கீழ் அமர்ந்து காயத்ரீ ஜபிப்பவர் பிரம்மஹத்தி தோஷத்தினின்றும் விடுபடுவர். அஷ்டாக்ஷர மஹா மந்திர ஜபம் பண்ணினால் முக்தி அடையலாம். வராஹ மந்திரத்தை லக்ஷம் முறை ஜபிப்பவர் ஸப்த த்வீபங்களுக்கும் அதிபதியாவார். இங்குள்ள புருஷோத்தம துளசி தளத்தால் பூஜை பண்ணுபவர் எழுலகாண்டு பின்னர் ஸாயுஜ்ய பதவியடைவார்.

இக்கோயில் எப்பொழுது கட்டப்பட்டது என்பது பற்றி புராதன சாஸனங்கள் ஒன்றும் இல்லை. கோயிலின் மதிளில் உள்ள கல்வெட்டு ...

... பட்டது தெரிய வருகிறது. சகாப்தம் 1505 (சுமார் 1581-82)லும், அதற்கு இரண்டொரு வருஷங்களுக்கு முன்னிலும் பொறிக்கப்பட்ட சிலா சாஸனங்களால் இந்த சன்னிதி திருமதிள்கள் விஜயப்ப கிருஷ்ணப்ப நாயக்கரால் கட்டப்பட்டதென்றும், சன்னிதி விளக்குக்கும், பூஜை நிவேதனத்துக்கும், நந்தவன பராமரிப்புக்கும், கோபுரம், பிராகாரம், மண்டபம் கட்டவும், ஆபரணங்கள் கட்டவும், செப்பனிடவும் பல பேர்களால் பூதானம் செய்யப்பட்டும் ஏற்கனவே உள்ள நிலங்களுக்கு வரிவஜா செய்யப்பட்டதுமான செய்திகள் கல்வெட்டுகளால் தெரியப்படுகிறது. உதயகிரி அச்சுதப்ப நாயக்கர், அவர் சகோதரர்களும் சேர்ந்து இங்கு அம்புஜவல்லி நாச்சியார் சன்னிதிகள் அமைத்தார்கள். பின்னர் 1714ல் டில்லீஸ்வரனுன பாதுஷா, பாதுஷாவின் கீழ்தர சிப்பந்தி திண்டிவனம் ஸ்ரீ நிவாஸ தாஸன் ஐந்து கிராமங்களை பூதானமாக சமர்ப்பித்தார். 1713ல் உடையார் பாளையம் ஜமீன்தார் அவர்கள், ஸ்ரீ பூவராஹப் பெருமானுக்கு திருக்கல்யாண மண்டபமும், ஆஸ்தான மண்டபமும் கட்டுவித்தார். மேலும் 1355ல் ஏகாம்பர கச்சிராயர் என்பவர் ஒரு மண்டபம் கட்டுவித்தார். இவைகள் தவிர சன்னிதிகள் நிர்மாணங்கள் விஷயமாக வேறு ஒரு விதமான ஆதாரங்களும் இல்லை. 1958ல் சாப்ரா ராணி அவர்கள் ஸ்ரீபூவராஹ ஸ்வாமி மூலவர் விமானத்தை புதுப்பித்து, தங்கமுலாம் கொண்ட கருடவாஹனம் ஸமர்ப்பித்து உடையவர் வருஷ திருநக்ஷத்திரத்திற்கு 0—59—சென்டு தஞ்சை நிலம் வாங்கி வைத்தார், புஷ்கரம் ஷேட் இங்குள்ள ஸ்வாமி தேசிகனின் சன்னிதியைப் புதுப்பித்தார். 950ல் அர்ச்சகர்கள் பெருமுயற்சியால் உத்ஸவ மண்டபத்தில் கண்ணாடி திருப்பள்ளியறை அமைக்கப்பட்டது.

ஸ்ரீமந் மணவாள மாமுனிகள் கைங்கர்ய அபிவர்த்தனி ஸபையாரால், ஸ்ரீமந் மணவாள மாமுனிகளின் 601 வது வருஷ அவதார மஹோத்ஸவம் ஞாபகார்த்தமாக, இரண்டாவது பிரதக்ஷிணம் கிழண்டை பிராகாரத்தில் வரிசையாக அமைந்திருக்கும் திருமங்கை மன்னன் சன்னிதி, ஸ்ரீமந் மணவாள மாமுனிகள் சன்னிதி, ஸ்ரீ காஞ்சி பூர்ணரென்னும் திருக்கச்சி நம்பிகள் சன்னிதி ஆகியன புதுப்பிக்கப்பட்டன. சமீபத்தில் 1972ல் தேவஸ்தான அறங்காவலர்களின் தலைவர் சிதம்பரம் ஸ்ரீமான் கே:எஸ். சுப்பிரமணியப்பிள்ளை அவர்களின் பெருமுயற்சியால், ஆலயம் பூராவும் அனேக லக்ஷம் ரூபாய் செலவில் ஜீர்ணோத்தாரணம் செய்யப்பட்டு 12-9-1975ல் மஹா சம்ப்ரோக்ஷணமும் மஹா விலக்ஷணமாக நடத்தப்பட்டது.

இந்த சன்னிதியில் பிரதான மூல மூர்த்தி ஸ்ரீ பூவராஹனுக்கு நித்தியப்படியில் கால சந்தி பூஜையில் திருமஞ்சனம் உண்டு. சுக்ரவாரம் தோறும் தனிக் கோயில் நாச்சியாருக்கு அபிஷேகம் உண்டு. மூல மூர்த்தி சாளக்ராம ரூபியானபடியினால் தினந்தோறும் திருமஞ்சனம் விசேஷம். திருமஞ்சனம் ஆனவுடன் நித்தியப் படியில் ஸ்ரீ பூவராஹப் பெருமானுக்கு முஸ்தாபி சூர்ணம் என்கிற மஹா பிரசாதம் அமுது செய்விப்பது தொன்று தொட்டு வரும் விசேஷாம்சமாகும். இந்த பிரசாதம் ஸ்ரீ பூவராஹ மூர்த்திக்கு மிகவும் இஷ்டமானதாகும். கோரைக் கிழங்கும், மாவும், பூரா சர்க்கரையும் சேர்த்து கலுவத்திலிட்டு மைய அரைத்து, சமதிட்ட அளவு பசு நெய்யும், பச்சைக் கற்பூரமும், சமதிட்ட அளவு ஏலப் பொடியும் கூட்டிப் பிசைந்து, தயாரிக்கப்பட்டு, எம்பெருமானுக்கு அமுது செய்விக்கப்படும் இந்த 'முஸ்தாபி சூர்ண' மஹா பிரசாதமானது மிக, மிக விசேஷமானதாகும். பல பாதகங்களையும், பல நோய்களையும் வேரறுக்கவல்லது.

பூத பிசாசுகளால் துன்புறுத்தப்படுவோரும், மகா ரோகங்களால் பீடிக்கப்படுவோரும், சனி முதலான கிரகங்களால் இன்னல் அடைந்தோரும், ஒரு மண்டலம் தினமும் காலை, மாலை இரு வேளைகளிலும் நித்திய புஷ்கரிணியில் ஸ்னானம் செய்து, விருதத்துடன், 108 தடவை அசுவத்த பிரதக்ஷிணமும், ஸ்ரீ பூவராகப் பெருமான், பாவன விமானப் பிரதக்ஷிணம் 12 தடவை செய்து எம்பெருமானின் 'முஸ்தாபி சூர்ண' மஹா பிரசாதத்தையும் சாப்பிட்டு, ஸ்ரீ வராஹப் பெருமானை 'ஜிதந்தே' ஸ்தோத்திரங்களினால் வழிபட்டு வருபவர்கள், துன்பங்கள் நீங்கி இன்பம் எய்துவர். மேலும் அவர்களுடைய மனோரதங்களையும் எம்பெருமான் பூர்த்தி செய்து வைப்பார்.

ஸ்ரீமந் மணவாள மாமுனிகள் என்கிற பெரிய ஜீயர் ஸ்ரீரங்கநாதனை நித்தியம் மங்களாசாஸநம் பண்ணும் முறையில் இக்கோயில் அமைத்திருக்கிறார்கள். 'தேவி கோதா யதிபதி சடத்வேஷிணோ' என்கிற சுலோகம் பிரகாரம் புனருத்தாரனம் பண்ணப்பட்டது. ஸ்ரீ வராஹப் பெருமான், பிரம்ம தேவனுக்கு நியமித்த பிரகாரமே, பகவத் ஸ்ரீராமானுஜர் உகந்த ஸ்ரீ பாஞ்சராத்திர ஆகமப் பிரகாரம் ஸ்ரீ பாத்ம சம்ஹிதைப்படி நித்ய திருவாராதனங்கள் நடந்து வருவது இந்த க்ஷேத்திரத்திலுள்ள ஏற்றமிகு விசேஷாம்சமாகும்.

ஸ்ரீ வராஹ புராணத்தில் ஸ்ரீ முஷ்ண மஹாத்மீயத்திலுள்ளவாறு 12 மாதங்களிலும் நடத்தப் பெறும் உத்ஸவங்கள் வைபவமாக நடந்து வருகிறது. மேலும் ஒவ்வொரு உத்ஸவத்திலும், பெருமாள் உலாவருவதற்குரிய வாஹனங்களும் நிவேதனம் ஆகியவைகளும் குறிப்பிடப்பட்டுள்ளன.

இந்த க்ஷேத்திரத்தில் வருடத்தில் இரண்டு பிரம்மோத்ஸவங்கள் நடந்து வருகின்றன. இரண்டு பிரம்மோத்ஸவங்களும் மிகவும் விசேஷமாகும். ஒன்று மாசி மாதம் பரணியில் துடங்கி பூசம் வரையில் ஏழு நாட்கள் ஸ்ரீ முஷ்ணத்தில் நடக்கும். எட்டாம் திருநாள் பெருமாத்தூர் என்கிற கிராமத்திற்கு எழுந்தருளுவார். ஒன்பதாம் திருநாள் மகத்தன்று கிள்ளை என்ற ஊரில் வங்கக் கடலில் விசேஷமாக தீர்த்தவாரியும் ததியாராதனமும் நடக்கும். தீர்த்தவாரி ஆனவுடன் எம்பெருமான் ஸ்ரீ முஷ்ணம் எழுந்தருளுகையில் வழியில் முதல் வாழ்க்கை, லால்புரம், சிதம்பரம், மேல மூங்கிலடி, புவனகிரி, ஆலம் பாடி, கூட்டாம் பள்ளி, சாத்த வட்டம், தேத்தாம் பட்டு, ராமாபுரம், கவரைப் பாளையம் ஆகிய கிராமங்களில் விசேஷமாக, மண்டகப்படி உபயங்கள் உண்டு. மேலும் அந்தந்த கிராமங்களில் எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் காலங்களில், விசேஷமாக ததியாராதனம் (சமாராதனை) நடக்கும். பிறகு எம்பெருமான் ஸ்ரீமுஷ்ணம் எழுந்தருளியவுடன் துவஜாவரோஹணம் நடந்து உத்ஸவம் பூர்த்தியாகிறது: இது மாசி மகப் பிரம்மோத்ஸம் எனப்படுகிறது.

(தொடரும்)



(23-ம் பக்கத் தொடர்ச்சி)

பாவங்களையும் நீக்கும் 'தீர்த்த ராஜம்' இத்தீர்த்தம். நீ உன் மகனை அங்கு அழைத்துச் சென்று முறைப்படி ஸங்கல்பம் முதலியன செய்துகொண்டு, ஸ்வாமி தீர்த்தத்தில் உன் மகனை நீராட்டுவாயாக.

श्रुतिसिद्धं महापुण्यं ब्रह्महत्यादि शोधकम् ।
नीत्वा तत्र सुतं तेऽद्य स्नापयस्व महामते ॥

அத்தீர்த்தத்தில் நீராடியவுடனேயே உன் மைந்தனின் நோய் நீங்கக் காண்பாய். இது உண்மை. நீராடிய பின் கரையில் உள்ள ஸ்ரீ வராகப் பெருமானை சேவித்து வேண்டிக்கொள். பிறகு மாலவன் திருக்கோயில் சென்று, வேண்டி, வேண்டியன பெறுவாயாக, புண்ணிய சீலனாக ஆவாயாக. மங்கலம் உண்டாகட்டும். சென்று வா''.

उन्मादस्तत्क्षणादेव तस्य नश्येन्न संशयः ।
इत्युक्तस्तं प्रणम्यासौ जैमिनिं मुनिपुङ्गवम् ॥

முனிவர் சொல்லைத் தலைமேற்கொண்ட மன்னன் அவரை வணங்கி விடைபெற்றான். திருவேங்கட யாத்திரையை உடனே துவக்கினான்; தன் மைந்தனுடன் வேங்கடகிரியடைந்தான். ஸ்ரீஸ்வாமி தீர்த்தத்தில் நெறிப்படி நீராடினான். மைந்தனையும் நீராட்டினான். நீராடி எழுந்த அக்கணத்திலேயே நந்த மைந்தன் தர்மகுப்தன் சித்தக் கோளாறு நீங்கியவனாக, அறிவுத் தெளிவு பெற்றவனாக ஆனான்.

स्नानमात्रात्ततः सद्यो नष्टोन्मादोऽभवत्सुतः ॥

பிறகு நந்தன் தன் மகனை அழைத்துக்கொண்டு கரையிலுள்ள ஸ்ரீ வராகப்பெருமானை சேவித்தான். மனம் நெகிழ்ந்தவனாய், பரமனின் கருணையை நினைந்து நினைந்து உள்ளம் உருகியவனாய், தன் பரிவாரங்கள் பின் தொடர கிருஷ்ண கானம் செய்துகொண்டே தயாநிதியாகிய ஸ்ரீநிவாசன் உறையும் திருக்கோயில் நுழைந்து முறைப்படி எல்லா வகையாலும் பெருமானை வழிபட்டான். உளம் மகிழ்ந்து நெஞ்சம் நிறைந்தவனாய் திருமாலின் திவ்ய வடிவில் மனதைப் பறி கொடுத்தவனாகத் திரும்பினான்.

தர்ம குப்தனுடன் நாடு திரும்பிய மன்னன் முன்னைக் காட்டிலும் அதிகமாக பரமனின் பக்தியில் திளைத்தவனாக ஆனான். திரும்பவும் தன் மகனை அரசாள அமைத்துவிட்டு தவத்தின் பொருட்டு வனம் சென்றான். தர்மகுப்தனும் முன்னைக் காட்டிலும் மிகுந்த விழிப்புணர்வுடன் அறநெறியில் நின்று அரசாட்சி செய்து வந்தான்.

இந்த இதிகாசத்தைக் கூறிய ஸ்ரீஸூத முனிவர் ஸ்வாமி தீர்த்தத்தின் பெருமையிலும், பரமனின் கருணையிலும் தன்னை மறந்து உணர்ச்சி வயப்பட்டவரானார்.

''தவச் சீலர்களே! பைத்தியம் பிடித்தவனோ, வலிப்பு நோய் கொண்டவனோ, அல்லது கிரக தோஷங்களால் பீடிக்கப்பட்டவனோ, யாராயிருந்தாலும், அவன் ஒரு முறை ஸ்ரீஸ்வாமி தீர்த்தத்தில் நீராடி பெருமானைப் போற்றினால் எல்லா தோஷங்களும் நீங்கப் பெற்றவனாக ஆவான். இது சத்தியம். முக்காலும் இது சத்தியம்'', என்று தன்னை மறந்து கூவினார்.

उन्मादैरप्यपस्मारैर्ग्रहैर्दुष्टैश्च ये नराः ।
ग्रस्ता भवन्ति विप्रेन्द्रास्तेऽपि
चाऽत्र निमज्जनात् ॥
पुष्करिण्यां विमुक्ताः स्युः सत्यं सत्यं वदाम्यहं ॥

எத்தீர்த்தத்தில் நீராடினாலும், நீராடும்போது ''ஸ்வாமி தீர்த்தம், ஸ்வாமி தீர்த்தம், ஸ்வாமி தீர்த்தம்'', என்று மும்முறை ஸ்மரித்துக் கொண்டு, திருவேங்கடவனை நினைந்து நீராடினால் நிச்சயமாக எல்லா தோஷங்களும் நீங்கும்.

स्वामितीर्थं स्वामितीर्थं स्वामितीर्थं इति
द्विजाः ।
त्रिः पठन्तो नरा एवं यत्र क्वाऽपि जलाशये ॥

தர்ம குப்தனுடைய இந்த இதிகாசத்தை எவன் சிரத்தையுடன் கேட்கிறானோ, படிக்கிறானோ, அவன் எல்லா பாவங்களினின்றும் விடுபட்டவனாக ஆகிறான்.

இவ்வாறு ஸ்ரீ ஸூத முனிவர் களிப்புடன் கூறியது கேட்ட சௌனகாதி முனிவர்கள் அனைவரும் ஸ்ரீ ஸ்வாமி தீர்த்தத்தின் ஆற்றலையும், பெருமாளின் கருணையையும் நினைந்து நினைந்து நெஞ்சம் நெகிழ்ந்து பரமனை நெஞ்சத்தால் பற்றி நின்றனர்.

அறிந்தும் அறியாமலும் பல காலம் பலவகைப்பட்ட பாவங்களை இடையறாது செய்துவரும் நாம், நம் வாழ்க்கைப் பிரச்சினைகளும், சமுதாயப் பிரச்சினைகளும் முற்றும் நீங்க, வாழ்வில் ஒரு முறையேனும் முறைப்படி விரதமிருந்து திருமலை சென்று, ஸங்கல்பத்துடன் ஸ்ரீ ஸ்வாமி தீர்த்தத்தில் நீராடி, ஸ்ரீ வராகரையும், துயர் துடைக்க என்றே ஏகாந்தமாக நிற்கும் வேங்கடநாதனையும் போற்றிப் பணிந்து வேண்டி வருதல் இன்றியமையாதது. இதனால் பெரும்பயனை அவரவர் வாழ்வில் கண்கூடாகக் காணலாம். ஒரு முறை சென்று வந்தால் போதும், பிறகு பரமனே நம்மை பன்முறை அழைத்து அருளொளி அளிப்பான்.

★



20-ம் பக்கத் தொடர்ச்சி

## அங்கம் 1

மஹாமோஹனைச் சேர்ந்த காமன், ரதி, வஸந்தன் ஆகியோரின் பேச்சுக்களின் மூலம், ஜீவனைக் கெட்ட குணங்கள் எப்படித் தங்கள் ஆதிக்கத்தில் கொண்டுள்ளன, அதனால் ஏற்படும் அநர்த்தங்கள் யாவை என்பவற்றை ஆசிரியர் இதில் வர்ணித்துள்ளார்: அநாதியான கர்மத்தின் காரணமாக ஜீவன் ஸம்ஸாரத்தில் உழல்கிறான்; இதினின்றும் மீளுமுபாயம் ஒன்றே- அது ஸ்ரீமந் நாராயணனான பரம் பொருளை பக்தி யோகத்தின் மூலம் த்யானம் செய்து அவன் அருளைப் பெறுவதே. இதை விவேகன் ஸுமதிக்குக் கூறுவதன் மூலம் அவன் எப்படி தனது தகப்பனான ஜீவனை விடுவிக்கப் போகிறான் என்பதையும் தமது லக்ஷ்யத்தையும் ஆசிரியர் வெளியிடுகிறார்.

ஸ்வாமி தேசிகனின் சரித்ரத்தின் பல விவரங்கள் இந்த அங்கத்தில் காணக் கிடைக்கின்றன—அவர் ச்ரேஷ்டமான விச்வாமித்ர கோத்திரத்தில் அவதரித்தது (ஸங். ஸூ 1-13), விஷ்ணு கண்டாவதாரமானது (ஸங். ஸூ 1-14), இருபது வயதுக்குள் ஸகல சாஸ்திர ப்ரவீணரானது (ஸங். ஸூ 1-15) ஆகியவை.

## அங்கம் 2 :

யோகம் ஆரம்பிப்பதங்கு முன் தத்துவ, ஹித, புருஷார்த்தங்களைப் பற்றிய தெளிவான, அசைக்க முடியாத நிச்சயங்கள் ஜீவனுக்கு அவசியம். இங்குதான் மஹாமோஹன் இவனுக்குப் பல புறச்சமயங்களைக் காண்பித்து இவனை மயக்கத்திட்டமிடுகிறான். மஹாமோஹனின் எண்ணத்துக்கு இம்மதங்கள் துணைபுரிவதை கவி ஹாஸ்யமாக பிசாசுகளின் விவாஹத்தில் கழுதையின் ஸங்கீதம் என்று வர்ணிக்கிறார். மஹா மோஹனின் இத்திட்டம் விசாரணை, ச்ரத்தை ஆகியோரின் பேச்சு வாயிலாக வெளி வருகிறது. இந்த அங்கத்தின் மீதி முழுவதும் சிஷ்யன், குருவின் அநுக்ரஹத்தால், விவேக ராஜனின்முன்பு பிறமதங்களை வென்று வாகை சூடுவதைக் காண்பிக்கிறது.

ஸ்வாமி தேசிகன் பாஷ்யகாரரிடம் அளவற்ற பக்தி கொண்டவர். அவருக்குத் தாம் நேராக சிஷ்யனாக இல்லையே என்ற மனக்குறையுடையவராக இருந்தார். அந்த தீவிர அவாவைப் பூர்த்தி செய்து கொள்ளவும் இங்கு அவர் பாஷ்ய காரரை குருவாகவும் தம்மை அவருடைய நம்பிக்கையான, வெற்றி பெறும் சிஷ்யனாகவும் வரைந்துள்ளார். யதிராஜ ஸப்ததியில் பாஷ்யகாரரைப் போற்றும் அநேக ச்லோகங்கள் இங்கு ஆசார்யனைத் தோத்திரம் செய்யுமிடத்தில் காண்பதாலும் (ஸங். ஸூ 2-13, 25-28, 38, 40, 42, 47, 49, 57-60, 88), அவரை ஸ்ரீ பாஷ்ய கர்த்தா என்று குறிப்பிடுவதாலும் (ஸங். ஸூ 2-22) இங்கு குரு பாஷ்யகாரரே என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. சிஷ்யனுக்கு இங்கு குரு செய்யும் ஆசீர்வாதம், நடாதூர் அம்மாள் ஸ்வாமி தேசிகனுக்குக் குழந்தைப் பருவத்தில் ஆசீர்வாதம் செய்த ச்லோகமாகவே அமைந்திருப்பதும் குறிக்கொள்ளத்தக்கது.

## அங்கம் 3 :

ராகனும் த்வேஷனும் விஷ்ணு பக்தியையும் விரக்தியையும் ஸத்வ ரஜஸ்தமஸ்ஸாகிய வலையில் சிக்க வைக்க வீண் ப்ரயத்னம் செய்கின்றனர்.

பிறகு விவேகன் ஸுமதிக்கு ஜீவனின் நிலையை விளக்குகிறான். ஸ்வர்கம் அஸ்திரமானது என்று அறிந்து ஜீவன் அதில் ஆசையை விட்டுவிட்டான். அதே அளவுக்கு அவனுக்கு மோக்ஷமடைய ஆசை அதிமாகியிருக்கிறது. அசைக்க முடியாத விஷ்ணு பக்தியையும், விரக்தியையும், விஷய ஸுகங்களில் வெறுப்பையும் அவன் அடைந்துள்ளான். இதற்குக் காரணம் ஸம்ஸாரத்திலுள்ள தோஷங்களைக் காண்பதும், அதைவிட முக்கியமாக பகவானை அடைவதின் மேன்மையை அறிந்ததுமேயாம். ஆக இவன் முமுக்ஷு என்று தீர்ந்துவிட்டது. நிஷித்த கர்மாக்களையும் காம்ய கர்மாக்களையும் விட்டுவிட்டு, நித்ய நைமித்திக் கர்மாக்களை அவன் சரிவர செய்து வருகிறான். இனி அவன் 32 ப்ரஹ்ம வித்யைகளுள் ஏதேனும் ஒன்றை வரித்து யோகம் செய்ய வேண்டும். அந்த எல்லா ப்ரஹ்ம வித்யைகளும் ஒரே பலனைக் கொடுப்பவை. பாகவதாபசாரமாகிற படுகுழியில் விழாமலும், அணிமாதி அஷ்ட ஸித்திகளில் ஆசை வைக்காமலும் அவன் மிக்க ஜாகரூகனாக இருக்க வேண்டும்; ஏனெனில் அவை இரண்டும் மறுபடியும் ஸம்ஸாரத்திலேயே இவனைப் பிணைக்கும்.

இச்சமயம் மஹா மோஹனிடமிருந்து ஒரு தூதன் விவேக ராஜனின் ஸபைக்கு வந்து, அவனுடைய "கட்டளை"யைத் தெரிவிக்கிறான். அதாவது எல்லாத் தெய்வங்களையும் பூசிக்க வேண்டும். அதுவும் மோக்ஷம் தவிர்த்த மற்றப் பலன்களுக்காகவே பூசிக்க வேண்டும். இல்லையேல் க்ரோதனும் மற்றவர்களும் தக்கபடி குறுக்கிடுவார்கள். விவேகன் அந்த உத்திரவை அதன் மதிப்புக்குத் தக்கவாறு புறக்கணிக்கிறான்.

## அங்கம் 4 :

காமனும் வஸந்தனும் நுழைகிறார்கள். பிறகு க்ரோதன், லோபன், த்ருஷ்ணை ஆகியோருடன் சேர்கிறார்கள். ஸௌபரி, விச்வாமித்ரர் போன்ற மகர்ஷிகளையும் சிறிது காலமாவது உலகவாழ்க்கையில் அழுந்தச் செய்யும் தங்கள் ஸாமர்த்யத்தைப் பற்றி ஒருவர் மற்றொருவரை முகஸ்துதி செய்கின்றனர். மற்ற சிறிய யோகிகளைப் பற்றிக் கேட்கவும் வேண்டாம். அவர்களை யோகத்தை அறவே மறக்கும்படி செய்து விடுவார்கள் இவர்கள். தங்கள் திட்டத்தை இவர்கள் பின்வருமாறு தெரிவிக்கின்றனர்: யோகியானவன் சரீரத்தைவிட ஆத்மா வேறென்று அறிந்திருந்தும், சரீரத்தைப்

போஷிக்க வேண்டியவனுகிருன். துக்கத்திலிருந்து விடுபட வேண்டுமென்று அவன் விரும்பும் போதே ஸுகத்தில் ஆசையை விடுவதில்லை. ஆகையால் அவன் இரண்டுங்கெட்டான் நிலையிலிருப்பதால், கெட்ட குணங்கள் அவனிடம் மறுபடியும் தலை தூக்கும்படிச் செய்ய நிறைய அவகாசமுள்ளது. அவன் போக முயற்சியில் ஊக்க முள்ளவனுயிருந்தாலும், வேறு விதங்களில் அவனைக் கவிழ்க்கலாம். தன்னைப் பிறர் சரிவரமதிக்கவில்லையென்று அவனுக்குக் கோபத்தை உண்டாக்கலாம். அந்த கோபமிலிருந்து அவமதித்தவனைக் கொல்லும் வரை செல்லும்படி செய்யலாம். பிறகு க்ரோதனுடன் அவனுடைய ஸகாக்களும் சேர்ந்து அவனுடைய போகத்தை நாசம் செய்வது எளிது. ஆனுல் அவர்கள் திட்டம் பயனளிக்கவில்லை. ஏனெனில் விவேகன் அநித்ராண ப்ரஜ்ஞை என்னும் காவல் காப்பான புத்தியால் ஏற்கனவே காக்கப்பட்டவன். இப்போது திதிக்ஷு (பொறுமை), ஸந்தோஷம் என்ற இரட்டைக் கவசத்தையும் அணிந்து கொள்கிருன்.

## அங்கம் 5:

தம்பனும் குஹனையும் (குஹனை= கோள் சொல்லுதல்) பேசிக் கொள்கின்றனர். இதன் மூலம் விவேகனுக்கெதிராக ஒரு அபிசாரத்தைச் செய்யும்படி தம்பனை தூர்மதி ஏவியுள்ளான் என்று நாம் அறிகிருேம். விவேகனை டாம்பீகமாகக் கார்யங்களைச் செய்யும்படி தூண்டுவதுதான் இந்த அபிசாரம்.

அடுத்தபடி தர்பன் வருகிருன். பல மதங்களையும் உயர்ந்த புருஷர்களையும் குறை கூறும்படி இவன் மஹா மோஹனுல் ஏவப்பட்டுள்ளான். இவன் தனனுடைய சிஷ்யர்களான பாஷ்ய, குதருஷ்டிகளைக் கொண்டு ஸாமர்த்யமான வாதங்களால் வேதத்தை உபயோக மற்றதாகச் செய்து விட்டதாகப் பெருமையடித்துக் கொள்கிருன். ப்ரமாணங்கள் நம்பத் தக்கவையானுல் ஒரு மதமில்லாமல் ஆறு மதங்கள் அவற்றிலின்று எவ்வாறு உண்டாகும் என்பது இவன் கேள்வி. வேஷம் போடும் ஸாதுக்களும் ஸந்யாசிகளும் உலகை எப்படி ஏமாற்றுகிருர்கள் என்பதை இவன் விவரிக்கிருன்.

இவனுடைய மனைவி அஸூயை அங்கு வருகிருள். அவள் ஸந்யாசினி வேஷத்திலிருப்பதால் அவளை இவன் அடையாளம் தெரிந்து கொள்ளவில்லை. தப்பிதம் செய்யாதவர்களிடமும் தப்பு உள்ளதாக நம்பும்படி காண்பிப்பதும், பண்டிதர்களின் மனத்

ளைத் கலக்குவதுமான கார்யம் அவ ளுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. தர்பனுக்கும் அஸூயைக்கும் யார் யாரை வணங்குவது என்று சர்ச்சை ஏற்படுகிறது. அருகில் ஸாதுவைப் போல் காணும் ஒருவரிடம் இதைத் தீர்க்க இருவரும் செல்கின்றனர். அந்த ஸாது வேஷத்திலுள்ளவன் தம்பனே. இம்மூவரும் தங்கள் தங்கள் கலைகளில் மிகவும் தேர்ச்சி பெற்றவர்களாகையால் ஒருவரை ஒருவர் அடையாளம் தெரிந்து கொள்ள சிறிது நேரமாகிறது. இதன் நடுவில் நகைச்சுவைமிக்க பல பேச்சு மாற்றங்கள் நடைபெறுகின்றன.

மஹா மோஹன் சார்வாக மதத்தைப் பரப்பும் தனது யோசனையை வெளியிடுகிறான். புண்ய நதி தீரங்களுக்குச் சென்று வசிக்கும்படி அவன் தம்பனையும், விரக்தர்கள் என்று தங்களைக் கருதுமவர் நடுவில் வசிக்கும்படி தர்பனையும் உத்தரவிடுகிறான். மேலும், எல்லாவிடங்களிலும் ஸாத்விக ஆஹாரத்தைக் கொடுக்கும்படி தீர்மானம் செய்கிறான். ஏனெனில் ஸாத்விக உணவே யோகத்துக்கு முக்ய உதவியாகும்.

## அங்கம் 6 :

ஸ்தம்பனின் வரவு. மஹா மோஹன் எங்கும் செல்லக் கூடிய விக்னனை (விக்னம்=தடங்கல்) எதிர்க்கட்சிக்கு அனுப்பி வைத்தான். ஆனால் அவன் ஜயமில்லாமல் திரும்பி வந்துவிட்டான். ஏனெனில் ஜீவன் நன்னடத்தையால் காக்கப்பட்டு வருகிறான் என்று நாம் அறிகிறோம். ஜீவன் யோகத்தின் முதல் ஐந்து படிகளை வென்று விட்டான். அவையாவன: யமம், நியமம், ஆஸனம், ப்ராணாயாமம், ப்ரத்யாஹாரம்.

விவேகனும் தர்க்கனும் ஜீவன் மேற்கொண்டு யோகம் செய்வதற்குத் தக்க இடத்தைக் கண்டுபிடிக்கும் பொருட்டு பாரத வர்ஷத்தைச் சுற்றி வருகிறார்கள். எல்லாவிடங்களையும் பார்த்த பிறகு, பகவான் வாஸம் செய்யும் ஜீவனின் இதயமே தகுந்த ஸ்தானம் என்று தீர்மானம் செய்கின்றனர். யோகம் செய்ய முக்கியமான நிபந்தனைகள் யாவையென்றால் மனம் சாந்தமாக இருக்க வேண்டும், பகவானின் அநுக்ரஹத்தால் யோகம் முடியும் பொருட்டு அவனிடம் சரணாகதி செய்ய வேண்டும், இடைவிடாது அவனது அழகிய திருமேனியை நினைப்பதும், த்யானம் செய்வதும் வேண்டும்.

வெவ்வேறு ஸ்தலங்களைப் பற்றிய ஆக்ஷேபங்களை ஸ்வாமி தேசிகன் ஒரே ச்லோகத்தில் (ஸங். ஸூ 6-38) சுருக்கமாக அநுக்ரஹித்துள்ளார்.

## அங்கம் 7 :

யோகத்துக்குத் தக்க இடத்தைத் தேர்ந்தெடுத்த பின் பகவானின் எந்த ரூபத்தை த்யானம் செய்ய வேண்டுமென்று தீர்மானிக்க வேண்டும். ஸம்ஸ்காரன் என்னும் ஓவியன் தனக்குக் கொடுக்கப்பட்ட சித்ர வேலையைத் தான் முடித்து விட்டதாகக் கூறுவதுடன் இந்த அங்கம் ஆரம்பமாகிறது. விவேகன், ஸுமதி, வ்யவஸாயன் ஆகியோர் அவன் ஓவியத்தைப் பார்க்க வருகின்றனர். உலக ஸ்ருஷ்டி முழுவதும் அவனால் வரையப்பட்டுள்ளது. அதில் அசுத்த ஸ்ருஷ்டியை முக்குணம் கலந்தவை என்று விலக்கி, ஸ்ரீமந் நாராயணன் தமது இச்சையால் எடுத்துக்கொண்ட அநேக உருவங்களைக் கொண்ட சுத்த ஸ்ருஷ்டியில் கவனத்தைச் செலுத்துகின்றனர். அவற்றுள் வ்யூஹங்களின் மேல் த்யானம் நிலைப்பது சிரமம். ஆகவே பத்து அவதாரங்களில் ஏதேனும் ஒன்றே த்யானத்துக்குத் தக்கது என்று முடிவு செய்கின்றனர்.

## அங்கம் 8 :

ஜீவனின் முன்னேற்றத்தால் மிகவும் பயமடைந்த மஹா மோஹனும் அவனைச் சேர்ந்தவர்களும் விவேகனைக் கடைசியாகத் தீர்மானத்துடன் எதிர்ப்பது என்று முடிவு செய்கின்றனர். ஆனால் அதில் அவர்கள் படுதோல்வியடைகின்றனர்? அது இவ்விதம் காண்பிக்கப்படுகிறது.

மஹா மோஹனும் துர்மதியும் நாரதருடன் ப்ரவேசிக்கின்றனர். விவேகனிடமிருந்து ஒரு தூதன் பின்வரும் உத்தரவைக் கொண்டு வருகிறான்: "தெற்கிலுள்ள எல்லா ப்ரதேசங்களும் கலியுகம் முடியும் வரை என்னுடைய ஆட்சியின்கீழ் இருக்க வேண்டியது. விலங்கு, தாவர வகைகள் மட்டும் உன் ஆட்சியின்கீழ் இருக்கலாம். நீ இதற்கு உடன்படாவிட்டால் நான் உன்னையும் உன்னைச் சேர்ந்தவர்களையும் நாசம் செய்வேன்."

மஹா மோஹன் இதற்கு அடிபணிவான் என்று எப்படி எதிர்ப்பார்க்க முடியும்? ஆகவே இரு தரப்புக்கும் பூர்ணமான யுத்தம் நடக்கிறது. யுத்தத்தை நாடக மேடையில் காட்ட முடியாது என்ற காரணத்தால், அதை நாரதரும் தும்புருவும் காண்பதாகவும், கண்டபடியே வர்ணிப்பதாகவும் அமைக்கப்பட்டுள்ளது. அவர்கள் கூற்றின்படி மஹா மோஹனின் சேனையில் முக்யமானவர் யாவரும் ஒவ்வொருவராகக் கொல்லப்படுகின்றனர்—லோபன் துஷ்டியினால் (பேராசை த்ருப்தியினால்), காமன் விரக்தியால், க்ரோதன் க்ஷமையால் (பொறுமையால்), கடைசியில் மஹா மோஹன் விவேகனால் கொல்லப்படுகின்றனர்.

## அங்கம் 9 :

விவேகன், வ்யவஸாயன், ஸுமதி ஆகியோர் ஜீவனின் முன்னேற்றத்தை ஆராய்ந்து, மேலும் அவனுக்கு வரக்கூடிய தடங்கல்களையும் யோசிக்கின்றனர். காமம், க்ரோதம் முதலியவை கர்மத்தினாலும் அவித்யையினாலும் உயிர் பெறக் கூடும். தமக்குத் தகுந்த ஸத்காரம் கிடைக்கவில்லை, அவமானம் உண்டாயிற்று என்ற எண்ணங்களால் இவ்விதம் ஏற்படலாம். இப்பகுதிகளை ஜீவன் ஜாக்ரதையாகத் தவிர்க்க

வேண்டும். ஸமாதி பூர்த்தியாகும் பொருட்டு ஸ்ரீமந் நாராயணனிடம் சரணாகதி செய்ய வேண்டும். தனது வர்ணாச்ரம தர்மங்களை ஒழுங்காகக் கடை பிடிக்க வேண்டும். அப்போது அவனிடம் ப்ரீதியடைந்த பகவான் அவன் யோகத்தைப் பூர்த்தி செய் தருள்வான். பிறகு ஜீவனுக்குச் செய்ய வேண்டியது யாதொன்று மில்லை. பகவானின் கருணையையே நம்பிக் கொண்டு சரீரம் விழும்வரை சாஸ்திரத்துக்குக் கட்டுப்பட்டு நடத் தலே அவன் செய்ய வேண்டியது. இப்பொழுது விடியும் ஸமயம் போலாம். இப்போது பூர்ண பகவத நுபவமாகிய பகலுமில்லை, முன்போல் ஸம்ஸாரத்தின் முழு இரவுமில்லை. இச்சமயத்தில் ஆசார்யனிடம் தகுந்த மந்த்ரோபதேசம் பெற்று அதையே மனனம் பண்ணிக் கொண்டிருந்தால் இவன் வெற்றி பெறுவது திண்ணம்.

## அங்கம் 10:

ஜீவனின் யோகத்தினால் மகிழ்ச்சி யுற்ற பகவான் தனது ஸங்கல்பத்தை அவனிடம் அனுப்புகிறார். ஜீவன் தனது நல்ல, கெட்ட கர்மங்களின் பலன்களை முறையே தனது மித்ரர் களுக்கும் சத்ருக்களுக்கும் கொடுத்து விட்டு, அர்ச்சிராதி மார்க்க மூலம் பரமபதத்தை யடைந்து, திரும்பி வருவோமென்ற அச்சமின்றியே, எம் பெருமானுக்கு ஸமமான ஆனந் தத்தை அநுபவிக்கிறான்.

இந்நாடகம் ஆசிரியரின் ஸாத் விக த்யாகத்துடன் இவ்விதம் அழ காக முடிகிறது.

வேதாந்தாசார்யர் என்னும் விருதுக்குத் தக்கபடி ஸ்வாமி தேசி கன் இந்நாடகத்தை ப்ரஹ்மஸூத்ரங் களைப் பின்பற்றி நடத்திச் செல் வதை நாம் இங்குக் குறிக்கொள்ள வேண்டும். இதன் முதன் அங்கம் ப்ரஹ்மஸூத்ரத்தின் ஸமந்வய அத் யாயம் என்னும் முதல் அத்யாயத்தை ஒத்தது. அதில் வேதாந்தத்தின் முக்ய கொள்கைகள் தீர்மானிக்கப் படுகின்றன. இரண்டாவது அங்கம் அபிரோத அத்யாயம் என்ற இரண் டாவது ப்ரஹ்மஸூத்ர அத்யா யத்தை ஒட்டியது. அதில் புறச் சம யங்கள் யாவும் புறக்கணிக்கப்படு கின்றன. மூன்றிலிருந்து ஒன்பதாம் அங்கம் வரை வைராக்யம் முதலிய நற்குணங்களை ஸம்பாதிப்பதும், யோகத்தைப் பூர்த்தி செய்வதும் கூறப்பட்டுள்ளன. இதே விஷயங் கள்தான் ப்ரஹ்மஸூத்ரத்தில் ஸாதந அத்யாயம் என்ற மூன்றாவது அத்யாயத்தில் உள்ளன. கடைசி யான ப்ரஹ்மஸூத்ர பலாத்யாயத் தைப் போல இங்கும் பத்தாவது அங்கத்தில் யோகத்தின் பலனான பரமபத ப்ராப்தியே பேசப்படுகிறது. சாந்தி மார்க்கம் நீண்டது, அதை ச்ரமத்துடனும் விடா முயற்சியுட னும் கடைபிடிக்க வேண்டும் என்று காட்டப்படுகிறது இந்த நாடகத்தில்.

## முடிவுரை:

முடிவில் சில பொதுவான விஷயங் களைக் கூறுவது முறையாகும். ஸ்வாமி தேசிகன் வேதாந்தத்தில் மட்டுமின்றி உலக விஷயங்களிலும் மிக்க ஜ்ஞான முள்ளவராக இந்நாடகத்தில் காணப் படுகிறார். நாடகத்தின் ஆழ்ந்த மனோவிஜ்ஞான கருத்துக்களும், அவற்றை நமது தினசரி வாழ்க்கை யில் அனுசரிக்கும் வகையும் தனி யான, விசேஷமான ஆராய்ச்சிக் குரியவை. ஜீவனின் முயற்சியை தெய்வம் பூர்த்தி செய்து வைக்கிறது. இதிலுள்ள பாத்திரங்கள் மிக்க உயி ருள்ளவை. அவை கேவலம் குணங் கள் என்பதை நாம் மறந்து உண்மை பாத்திரங்கள் என்றே நாம் நினைக் கும்படி அமைந்துள்ளன. நாடக சாஸ்திரத்தில் கூறிய முறைகள் யாவும் வழுவாமல் இங்குக் கடைப் பிடிக்கப்பட்டிருக்கின்றன. ஸாஹித்ய அழகுகள் இதில் அதிகம். கவித்வம் இதில் திகழ்கிறது. மிகவும் கம்பீர மான பல ச்லோகங்களைக் காண் கிறோம். தமது பல க்ரந்தங்களி லிருந்து அநேக பாகங்களை ஸ்வாமி தேசிகன் இதில் சேர்த்து அழகு படுத்தியிருப்பது ஒரு தனி விசேஷம். சிக்கலான ப்ரச்னைகளை எளிதாகத் தீர்க்கும் ஸாமர்த்யம் (உதாஹரணம் ஸங். ஸூ 2-24) நம்மை மெச்சும் படி செய்கிறது. எல்லாவற்றையும் கவனிக்கும்போது, ஸ்வாமி தேசிகன் தாமே அருளியது போல (ஸங். ஸூ 1-24), குறை கூறுவதிலே கருத்தா யிருப்பவர்களும் இந்நாடகத்தைக் கண்டு தம்மையறியாமல் ஆமோதிப்பார்கள் என்பது திண் ணம்.

முற்றும்.

## அறிவிப்பு

திருமலையில் கல்யாணோற்சவம் போன்ற ஆர்ஜித சேவைகளுக் காக பக்தர்களால் எம்.ஓ. மூலம் அனுப்பப்படும் தொகையை தி. தி. தேவஸ்தானம் ஏற்றுக் கொண்டாலும், அம்முறை சில நிருவாக சிக்கல் களையும், கால தாமதத்தையும் ஏற்படுத்துவதால், பக்தர்கள், அனுப்ப வேண்டிய தொகையை டி. டி. (D. D.) மூலம் அனுப்பினால் மேலாண் மைக்கு அம்முறை உதவியாக அமையும். மேலும் ஆந்திரா வங்கி மற்றும் சில வங்கிகள் இது போன்று தி. தி. தேவஸ்தானத்தின் பெய ரில் வழங்கப்படும் டி.டி.களுக்கு எவ்விதக் கட்டணமும் பெற்றுக் கொள்வதில்லை.

சொல்லி நடந்தக்கால்

`ாஸ இராகவன்-குரோம்பேட்டை.

# திருவேங்கடமலை வரலா

`டத்தான்

`ன் மேகம்

— 8 —

சூழ்ந்து

.ால்

வர்களாய் ‹ற்

நியமங்களை அப்ட

வந்தனர்.

### திருவேங்கடவன் திருவாணை :

அதன்பின்பு ஸ்ரீ ராமாநுஜ முனிவர் கூறியவையும் சாத்திரங்களுக்கு இணங்கியவையுமாகிய சிறந்த நியமங்கள் அநுஷ்டிக்கத் தக்கவையென்று நினைத்த திருமலை நம்பிகளும் திருமலையனந்தாழ்வானும் இவை திருவேங்கடமுடையானுல் நடத்தப்பட வேண்டியவையென்றெண்ணி, 'பகவானே யதிராஜரது விருப்பத்தைப் பயன்பெறும்படிச் செய்வாயாக' என்று பெருமானைக் குறித்து மனதினுல் வேண்டிக்கொண்டனர். பின்பு அன்றிரவு திருமலை நம்பிகளின் கனவில் திருவேங்கடநாதன் எதிரில் வந்து 'வாரீர் திருமலை நம்பிகளே எம்பெருமானுராகிய யதிராஜருடைய உத்தரவின்படி, முன்பு ஒரு காரணத்தினுல் விடப்பட்ட சங்கு சக்கரங்களை மறுபடியும் கைக்கொள்ளுகை எனக்கு எப்படி இஷ்டமாக ஆயிற்றே அப்படியே இப்பொழுதும் அவரிட்ட மற்ற கட்டளைகளும் எனக்கு இஷ்டமானவையே' என்று கூற, இதைக் கேட்டு விழித்தெழுந்த திருமலை நம்பிகள் இதனைப் பண்டிதர் பாமரரென்ற வாசியற அனைவர்க்கும் பகவான் மூலமாகவே அறிவிக்கவேணுமென்று திருவுள்ளங்கொண்டு மறுநாள் கோவிலுக்கு வந்து 'வாரீர் பகவானே திருவேங்கடமலை நாயகனே அலர்மேல் மங்கையுறை மார்பனே தேவரீர் அடியேனுக்குக் கனவில் இட்ட கட்டளையை நேராக மக்கள் அனைவரும் அறியும்படிச் செய்தருள வேண்டு'மென்று பிரார்த்தித்தனர். அப்போது திருவேங்கடநாதனும் ஒரு பக்தனை ஆவேசித்து 'ஹே ஜனங்களே எனது இவ்வாணையை நீங்களனைவரும் கேளுங்கள். நான் முன்பு செய்த ஸ்ரீராம க்ருஷ்ணுதி யவதாரங்களில் வசிஷ்டர் முதலான குருக்களின் ஆணையைப்போல, இப்போது ஸ்ரீபாஷ்யம் முதலிய நல்ல நூல்களை இயற்றியதன் மூலமாக நானே பரம்பொருளென்பதை வெளியிட்டவரும் எனக்குச் சங்கு சக்கரங்களை யளித்தவருமான ஸ்ரீ பாஷ்யகாரருடைய (இராமானுசருடைய) ஆணையையும் ஆதரித்து அதன்படி அனுஷ்டிக்கிறேன். என்னைச் சேர்ந்தவர்கள் எல்லோரும் ஸ்ரீ பாஷ்யகாரர் ஆணையிட்ட நியமங்கள் எல்லாவற்றையும் எனக்கு இஷ்டமானவையென்று நினைத்து நம்பிக்கையுடன் அனுஷ்டியுங்க'ளென்று கூறியருளினுன். திருவேங்கடமுடையானுடைய இவ்வாணையைக் கேட்ட அங்குள்ள மக்கள் அனைவரும் மகிழ்ந்து, அப்போது அப்பெருமானுடைய அந்தரங்கத் தொண்டரான செங்கனிவாயன் என்னும் அர்ச்சகர் ஸ்ரீ சடகோபனை (பெருமாள் திருவடி நிலைகளை) எல்லார் தலைகளிலும் ஸாதித்து 'வாரீர் பாகவதர்களே இத்திருமலையில் திருவேங்கடமுடையானுக்கு இஷ்டமாகவும் சாஸ்திரங்களுக்கு ஸம்மதமாகவும் ஸ்ரீ பாஷ்யகாரர் ஏற்படுத்திய இந்த நியமங்களை அனுஷ்டிப்பவர்கள் பெருமாளுக்கு மிகவும் பிரியமானவர் ஆவர். அனுஷ்டியாதவர்கள் பகவானுடைய திருவாணையான வேத சாஸ்திரத்திற்குப் புறம்பானவர் ஆவர்'—என்று நியமிக்கப்பட்டவர்களாய் ‹ற் நியமங்களை அப்ட வந்தனர்.

### திருமலையில் பூமாலை அணியத்தகா:

இனித் திருவேங்கடமலை மாலை முதலியவற்றை உபயோகி கூடாதென்னும் செய்தி கூறப்படு இங்ஙனம் பகவானுடைய ஆணையினுல், பகவத் ராமானுஜரால் ஏற்படுத்தப்பட்ட - சாஸ்திர விதிக்கும் ஒட்டிய-பெருமாளுக்குச் சிறப்பாகத் திருமுக மலர்த்தியை உண்டாக்கும் நியமங்களை அனைவரும் கபடமில்லாமல் அனுஷ்டித்து வருமளவில், திருமலை நம்பிகளின் சிஷ்யனெருவன் ரஜோகுண தமோகுணங்கட்கு வசப்பட்டு ஒரு நாள் பெருமாளுக்குச் சாத்தாத பூமாலையைத் தலையில் சூட்டிக் கொள்ள, அன்றிரவு அத்திருமலை நம்பிகளின் கனவில் பெருமாள் தோன்றி எதிரில் நின்று 'வாரீர் திருமலை நம்பிகளே உமது சிஷ்யன் தீக்குணங்கட்கு வசப்பட்டவனுய் எனக்குப் பரிமளத் துரோகம் (வாசனைப் பொருள் விஷயமான தீங்கு) செய்தா'னென்று கூற, இதைக் கேட்ட அவர் நித்திரை விழித்தெழுந்து மறுநாள் கோவிலுக்குச் சென்று 'பகவானே இன்று முதலாகத் தினமும் உன்னுடைய மாலைப் பிரசாதத்தை யாருக்கும் அளிக்க வேண்டாம். கலியின் தோஷத்தினுல் நல்லோர்க்கும் தீய

திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்,
சிரோமணி—வித்வான், திருப்பதி.

(ஸ்ரீமத் அனந்தார்யர் அருளிய ஸ்ரீ வேங்கடாசல-இதிஹாஸ மாலாவின் தமிழ் மொழிபெயர்ப்பு)

ஒழுக்கங்கள் விளைய இடமுண்டு. திரு மலையில் நீ யாருக்கும் பூமாலையைத் தராதிருந்தால், பெருமாளுக்குச் சாத்தின மாலையைத்தான் நான் சூட்டிக் கொண்டிருக்கிறேனென்று ஏமாற்ற முடியாதாகையால் அரசன் தண்டிப்பானென்னும் அச்சத்தினால் தீய ஒழுக்கம் ஏற்பட இடமிராது; ஆகையால் இத்திருமலையில் பூமாலையே தரிக்கக் கூடாதென்ற தடையானது அரச தண்டனை வசமாக ஏற்பட்டு விட்டால் அதுபோன்ற சாதாரணமான சகல போகங்களும் போகப் போகக் குறைந்துவிடும். ஆகையால் அடியேனுடைய இக் கோரிக்கையை நிறைவேற்றி வைக்க நீ உறுதியான விரதம் கொள்ள வேண்டும்' என்று வேண்டிக் கொண்டனர்.

பிறகு ஸ்ரீநிவாஸ பகவான் அவரது விண்ணப்பத்தைக் கேட்டு அர்ச்சகர் மூலமாக 'வாரீர் திருமலை நம்பிகளே எனது அர்ச்சாவதாரமானது என் பக்தர்களின் இஷ்டத்தை நிறைவேற்றுதலையே பயனாக உடைத்தாதலின் உம்முடைய கோரிக்கையை நிறைவேற்றுதற்காக, நான் சாத்திக் கொண்ட புஷ்பமாலை முதலியவற்றை இன்று முதலாக யாருக்கும் அளிக்க மாட்டேன். ஆகையால் இனிமேல் நான் அணிந்து களைந்த மாலை முதலியவற்றை ஸேனை முதலியார் முதலிய பரிவார தேவதைகளுக்குச் சாத்த வேண்டும்; அல்லது பூலபாவியில் சேர்க்க வேண்டுமென்று விளக்கமாகத் திருவாணையிட்டருளினன். பின்பு இச்செய்தியைக் கேட்டு இராமானுச முனிவரும் மகிழ்ச்சியடைந்தனர்.

**ஸ்ரீஸேநாபதி ஜீயரென்னும் ஏகாங்கியை ஏற்படுத்தல்:**

இனித் திருவேங்கடமலையில் நித்ய வாசம் செய்து கொண்டு பெருமானின் திவ்யமான ஐச்வர்யத்தைப் பாதுகாப்பதற்காக, இராமானுசமுனிவர் தமக்குப் பிரதிநிதியாக (பதிலாக) ஸ்தாபித்த ஸ்ரீஸேநாபதி ஜீயரென்ற பெயரையுடைய நைஷ்டிகப் பிரம்மசாரியான (ஆயுள் முழுதும் மணம் செய்து கொள்ளாமல் மாணியாகவே இருந்த) ஏகாங்கி ஸ்வாமியின் சரித்திரம் கூறப்படும்.

பகவத் ராமாநுஜ முனிவர் முற்கூறிய சிறந்த நியமங்களை ஏற்படுத்திய பின்பு, திருமலை நம்பிகளின் சிஷ்யனாகிய ஒரு ஸ்ரீவைஷ்ணவன் கலியின் தோஷத்தினால் முற்காட்டியபடி ஓர் நியமத்தை மீற நேரிட்டபடியைக் கண்டு, அந்நியமங்களை உள்ளபடியே அனுஷ்டிப்பதற்கும், ஸ்தல வாசிகளுக்கு அப்போதைப் போது அந்நியமங்களின் பெரும் பயனை உபதேசித்து அவற்றை அவர்களும் அனுஷ்டிக்கும்படிச் செய்வதற்கும், தேசாதிபதியான அரசனுக்கு அவ்வப்போது ஸ்ரீ வைஷ்ணவ தருமங்களைக் கற்பிப்பதன்மூலம் நம்பிக்கையை உண்டாக்கி அதன் வாயிலாகத் திருவேங்கடமுடையானது திவ்யோத்ஸவம் முதலிய ஐச்வர்யங்களை வளர்ப்பதற்குமாக இத்திவ்ய தேசத்தில் பற்றற்ற மேற்பார்வையாளர் ஒருவர் ஸ்திரவாஸம் செய்து கொண்டிருக்க வேண்டுமென்று சிந்தித்து, திருமலை நம்பிகளையும் திருமலையனந்தாழ்வானையும் அழைத்து 'ஆரியர்காள் இத்திருப்பதியில் திருவேங்கடவனது திருச்செல்வங்களைப் பரிபாலிக்கவும் மக்கள் தீயொழுக்கமில்லாமல் இம்மை மறுமைப் பயன்களை அனுபவித்து இன்பமாக வாழ்வதற்குக் காரணமாக அடியேன் ஏற்படுத்திய நியமங்களை உள்ளபடியே நடத்தி வைக்கவும் கோவிலிலுள்ள ஸர்வ பரிஜனங்களையும் அடக்கியாளுமவராக வைராக்கியத்தை முக்கியமாகக் கொண்ட உயர்ந்த ஒரு அதிகாரியை இத்திருமலையில் நித்யவாசியாய் இருக்கும்படி ஸ்தாபிக்க வேண்டுமென்று சிந்தித்திருக்கிறேன். எப்போதும் பெருமாளுடைய குணங்களை அனுபவிப்பதிலும் தொண்டுகளைச் செய்வதிலுமே முக்கிய நோக்கமுடையவர்களாய்க் கோவில் பரிஜனங்களின் குண தோஷங்களைக் கண்டு அதற்குத் தக்கவாறு அவர்களைத் தண்டித்தல் முதலிய காரியங்களில் திருப்தியில்லாதவர்களான தேவரீர் இருவருக்கும் அவ்வக்காலங்களில் கோவிலில் தவறாமல் இருந்து அவ்வச் சந்தர்ப்பங்களுக்கேற்பச் செய்ய வேண்டிய காரியங்களில் குழப்பத்தினால் உண்டாகும் சிரமத்தைப் பொறுக்கவோ செய்யவோ முடியாமையினால், தேவரீர்களுக்கு அடங்கியவராய்த் தேவரீர்களின் ஆணையைப் பின்பற்றுமவராய் முற்குறித்த காரியங்களை நிறைவேற்றுவதில் ஊக்கங்கொண்டவராய்ப் பற்றற்றவரான அதிகாரியொருவரை ஸ்தாபிக்க விரும்புகிறேன். ஆகையால் தேவரீர் இருவரும் இசைந்து, அடியேன் ஏற்படுத்தும் அதிகாரி தமது கடமையினின்றும் வழுவாமல் நடந்து கொள்ளும்படி அவரைப் பாதுகாக்க வேண்டும். அடியேன் இங்கேயே ஸ்திரமாக இருக்கவல்லேனல்லேன். இருந்தால் அடியேனே இக்காரியத்தைச் செய்வேன்' என்று கூறி,

'ஒரு பிரம்மசாரி தனக்குப் பற்றற்ற நிலையில் உறுதியான எண்ணம் இருப்பதாகத் தெரிந்தால் புத்திசாலியான அவன் அவ்வெண்ணத்தையே ஸங்கல்பித்து (ஆயுள் முழுதும் மணம் செய்து கொள்ளாமல் இவ்வுறுதியான எண்ணத்தோடு இருக்கக் கடவேனென்று அறுதியிட்டு) காஷாயத்தை உடுத்தக்கடவன்' என்று பாரமேச்வர ஸம்ஹிதையிலுள்ளபடி இல்லற வாழ்க்கையில் ஆசையற்று வீரியத்தை (கீழே விழவிடாமல்) மேல் நோக்கிச் செலுத்தி (அடக்கி) மந்திர பூர்வமாகக் காவித் துணியைத் தரித்த பிரம்மசாரியே நைஷ்டிகப் பிரம்மசாரியாகையால் அப்படிப்பட்ட ஒருவரைத் தேடிப் பிடிக்க வேணுமென்று சொல்லி, அப்போது அனந்தாழ்வானுடைய சிஷ்யரொருவர் பிரம்மசாரியாய்க் குருகுலவாஸத்தில் மிகவும் விரும்பி ஆசார்யகைங்கரிய மொன்றிலேயே ஊன்றி

யவராய்ப் பற்றற்ற தன்மையரா யிருக்கக் கண்டு அவரையழைத்து நல்லுபதேசம் செய்து, தாம் எண்ணியபடிக் காவியுடையணிந்துகொள்ளவும் திருவேங்கடமுடையான் கோவிலில் முன்சொல்லியபடி எல்லாக் கைங்கரியங்களையும் செய்யவும் அவரை இசைவித்து அவருக்கு அனந்தாழ்வானுடைய அனுமதியும் பெறுவித்து நைஷ்டிகப் பிரம்மசரிய நிலைக்கு அங்கமாக முற்கூறிய ஸம்ஹிதாவசனத்தினுல் அறியப்பட்ட காவியுடையை மந்திர பூர்வமாகத் தரிக்கும்படிச் செய்து, சேனை முதலியார் போன்று பகவத் கைங்கர்ய பாரத்தை வகிப்பதனுலும் துறவறத்திற்கு அங்கமான முக்கோல் காவியுடையாகிய இரண்டில் ஒன்ருய்ப் பற்றற்ற தன்மையைத் தெரிவிக்கும் காவியுடையைத் தரிப்பதனுலும் விஷ்வக்ஸேனைகாங்கி யென்றும் ஸேனுபதிஜீய ரென்றும் திருநாமம் சாத்தி, 'வாரீர் ஏகாங்கியே திருவேங்கடமுடையானது திருச்செல்வத்துக்குக் குறைவு வாராமலும் கோவிலில் கைங்கரியம் செய்பவர்கள் அபசாரம் செய்யாமலும் இருக்கும்படி நல்ல உபதேசம் செய்து அவர்கள் மூலமாகப் பெருமாள் கைங்கரியங்களை நடத்திவையும். திருவேங்கடமுடையானுடைய திருமேனிக்கும் திருப்பவள வாய்க்கும் தக்கவாறு ஔபசாரிகம் (கிட்டி நின்று செய்யும் தூப தீபங்கள் காட்டுதல் முதலியவை) ஸாம்ஸ்பர்சிகம் (தொட்டுச் செய்யும் பீதாம்பரம் சந்தனம் புஷ்ப மாலை யணிவித்தல் முதலியவை) ஆப்யவஹாரிகம் (பாற்சோறு பாயஸம் சர்க்கரைப் பொங்கல் முதலிய இனிய பொருள்களை நிவேதனம் செய்தல்) என்கிற எல்லாவிதமான போகங்களையும் முறைப்படி நிறைவேற்றிவையும். தேசாதிபதியான அரசனை அவ்வப்போது அணுகி அவனுக்குப் பெருமாள் கைங்கரியத்தில் ஊற்றத்தை வளரச் செய்யும். அவனைக் கொண்டு, நின்று போன தொண்டுகளை மறுபடியும் உண்டாக்கி

# நாமஞ்சொல்லி நடந்தக்கால்

திரு: வா. ர. ஸ்ரீனிவாஸ இராகவன்-குரோம்பேட்டை.

வண்ணமா மலையுதித்த வேங்கடத்தான்
வடிவழகிற் சொக்கிடும் வானின் மேகம்
புண்ணியந்தான் சேர்க்கிறது சுற்றிச் சூழ்ந்து
புகையிந்த விண்மூச்சு நம்மேல் பட்டால்
எண்ணமெலாம் ஏறிவரும் வினைகள் யாவும்
எழுந்திறங்கி ஓடிவிடும்: எளிது இஃது
கண்ணனிரும் கவின்மலையில் கருத்தை ஒன்றி
காலாற நாமஞ்சொல்லி நடந்தக்கால்.

குயிலெல்லாம் பூபாளம் குழுமிப் பாடும்
குளிர்சோலை மரமெல்லாம் இடித்து தம்மில்
பயிலுமிந்த பாட்டுக்குத் தாளம்: சோலைப்
பசுங்காற்று சுருதியைக் கூட்டும்: ஆடும்
மயிலெல்லாம் மகிழ்ந்துசதி போடும்: யாவும்
மாயவனின் கருணைசேர அவனைக் காலைத்
துயிலெழுப்பும்: திருமலையில் இந்தக் காட்சி
திருமாலின் நாமஞ்சொல்லி நடந்தக்கால்.

மருண்டோடும் மானெல்லாம் மகிழ்ந்து கத்தும்
மாதவனே! மலையப்பா என்றே தம்முள்!
உருண்டோடி உடலாற்சுற்றி வலஞ்செய்யும்
ஊர்ந்தோடும் உடற்பெருத்தப் பாம்புக் கூட்டம்!
இருந்தாடும் புள்ளினங்கள் இசைந்து வெற்பில்
இறைவனைப் பலகுரலாற் பணிந்து பாடும்!
புரண்டோடும் புகழ்சேர்ப்பான் வாழ்வில்: நாமும்
பெருமானின் நாமஞ்சொல்லி நடந்தக்கால்.

விண்முட்டி மண்முட்டும் குன்றம்! நம்மின்
வினைமுட்டி வாழ்வளிக்க விளிக்கும் குன்றம்;
கண்ணனின்நற் கவினழகைக் காட்டும் குன்றம்!
கடலன்ன கருணைதரும் வண்ணக் குன்றம்!
பண்பாடி பல்லோர்கள் பணிந்த குன்றம்
பாரினிலே வேங்கடவன் பாதமொன்றே
திண்ணமென திக்கெல்லாம் காட்டும்: நாமும்
தூயவனின் நாமஞ்சொல்லி நடந்தக்கால்.

தாழும்நய வாழ்வுநிலை: தாங்கவொண்ணுத்
துன்பங்கள் உள்ளத் தடுமாற்றம்: என்றும்
பாழும்நம் ஐம்புலன்கள்: கூடித் தேடும்
பாவத்தின் பெருக்கங்கள்! இவைகள் யாவும்
வீழும்:நம் வேங்கடத்தின் வேந்தன் நிற்கும்
விண்ணுலகின் வளப்பத்தை வடித்துக் காட்டும்
ஏழுமலை எமையேற்றும் என்றே எண்ணி
என்றுமவன் நாமஞ்சொல்லி நடந்தக்கால்.

யும், அவ்வக்கால தேசங்கட்கு ஏற்ற வாறு புதிதான கைங்கரியத்தை ஏற் படுத்தியும், நடந்துவரும் கைங்கரி யங்களை மேன்மேல் வளர்த்தும், திரு வேங்கடமுடையான் கைங்கரியப் பொறுப்பை ஏற்றவர்களும் அதனால் அப்பெருமானது மிகவுயர்ந்த அபி மானத்திற்குப் பாத்திரமானவர்களு மான திருமலை நம்பிகள் அனந்தாழ் வான் ஆகிய இருவரிட்ட கட்டளை யைத் தலையால் ஏற்று நடத்தியும் திருவேங்கடவனது திவ்யைச்வர்யத் தைப் பரிபாலனம் செய்யும்' என்று நியமித்தருளினார். (இராமாநுச முனி வர்)

**அந்த ஏகாங்கிக்கு மடம் முதலான வற்றை உண்டாக்குதல்:**

மேலும் அவ்விராமானுச முனிவர், இராமாவதாரத்தில் பெருமாளுடைய குற்றமற்ற நித்யகைங்கரியபாரத்தை அனுமான் வகித்தபடியினால் அவரு டைய அபிமானம் ஏற்படுவதற்காக அவர் ஸந்நிதிக்குச் சமீபத்திலேயே அவ்வேகாங்கிக்கு வாஸம் செய்ய மடமொன்றைக் கட்டுவித்து, ஸ்ரீ ராமாயண க்ரந்த சாத்துமுறைச் சம யத்தில் திருமலைநம்பிகளால் அருளப் பட்டுத் தம்மால் ஆராதிக்கப்பட்டு வரும் சக்ரவர்த்தி திருமகனாரை (இராமபிரானை) அம்மடத்தில் எழுந் தருளப் பண்ணி அப்பெருமானுக்குத் திருவாரதனம் ஊக்கமாகச் செய்யும் படி அவ்வேகாங்கியை நியமித்து, திருவேங்கடமுடையான் கைங்கரிய பாரத்தைஏற்பவரும் இராமபிரானைப் பூஜிப்பதில் முழு நோக்குடையவரு மான இந்த ஏகாங்கிக்கு, முன்பு அந்த ஸ்தானத்தை வகித்த ஹனு மானுடையதான லக்ஷணங்களே பக வத் கைங்கர்ய பாரத்தை வகிக்குந் தன்மையைத் தெரிவிக்கின்ற சிறந்த லக்ஷணங்களாக இருக்கத் தக்கன வென்றும், ஹனுமானுடைய அபி மானத்தை வளர்ப்பதனால் குற்றமில் லாத பகவத் கைங்கரியத்தை ரக்ஷிப் பதற்கு உறுப்பானவையென்றும் நினைத்து அனுமானுருவம் பொறித் தவைகளான ஒரு மோதிரம் கோவில் வாசற்கதவில் பூட்டும் பூட்டுக்கு ஒரு திறவுகோல் ஒரு மணி ஒரு கொடித் துணி ஒரு கொடித்தடி ஆகியவற்றை நிருமாணம் செய்வித்துத் திருவேங் கடமுடையான் முன்பே வைத்து, அப்பெருமானது ஆணையைப் பெற்று அவ்வேகாங்கிக்குக் கொடுப்பித்து, அது முதற்கொண்டு அவர் கைங்கரி யத்திற்குச் செல்லும்போது அம்மணி யோசையுடனும் அக்கொடியுடனும் செல்ல வேண்டுமென்றும், அனுமனுரு வம் பொறித்த மோதிரத்தால் கரு வூலம் தானியக்கூடம் கோவில் முத லியவற்றின் வாசற்கதவுப் பூட்டுக் களிலும் பணப்பெட்டிகளிலும் ஆப ரணப் பெட்டிகளிலும் முக்கியமாகக் காப்பாற்ற வேண்டிய எல்லாவிடங் களிலும் பாதுகாப்புக்கு உறுப்பாக முத்திரை (ஸீல்) வைக்க வேண்டு மென்றும் அனுமானுருப் பொறித்த திறவுகோலால் தினந்தோறும் இர வும் பகலும் பெருமாள் திருவாரா தனம் முடிவு பெற்ற பிறகு கோவிற் கதவில் பதித்த பூட்டைப் பூட்ட வேண்டுமென்றும் இங்ஙனம் பெரு மாளுடைய திவ்யைச்வர்யத்தின் பாதுகாப்புக்கான நியமங்களைச் செய் தருளினர்.

**யாதவராஜனுக்குக் கட்டளை யிடுதல்:**

பின்பு அந்த பகவத்ராமானுஜர் தமது திருவடிகளில் சேவித்திருக் கும் யாதவ மன்னனை அழைத்து 'வாராய் யாதவராஜனே நாடோறும் நன்றாக வளர்ந்து வருகின்ற கலியுக ஆடம்பரத்தின் பலத்தினால் திருவேங் கடநாதனது திவ்யைச்வர்யத்திற்கு எல்லாவிதமாகவும் தீங்கு நேரிடு மென்று என்மனம் அஞ்சுகிறது. ஆகையால் நான் இக்கட்டுப்பாடு களைச் செய்தேன். இவற்றை முறைப் படி நிறைவேற்றி வைக்கக் கடவாய். இக்கோவிலில் உள்ள கைங்கர்யம் செய்வோரும் மற்ற பரிஜனங்களும் ஆகிய அனைவரும் எனக்குப் பிரதி நிதியாக என்னால் ஏற்படுத்தப்பட்ட இந்த விஷ்வக்ஸேன ஏகாங்கிக்கு எல்லாவகையிலும் அடங்கி நடக்க வேண்டுமென்றும் இவருடைய ஆணையை மீறியவர்கள் அவ்வுரிமை யிலிருந்து நீக்கப்படுவரென்றும் மிக பலமுள்ள கடுமையான உத்தரவை மிகவுறுதியாகப் பத்திரிகை மூலம் அறிவிக்கக் கடவாய். இவர் மரண மடைந்தாலும் தமது கடமையில் ஊக்கமின்றி வரம்புமீறி நடந்தா லும், எனக்கும் கௌரவித்தக்க மிகப் பெரியவர்களாய் வயது முதிர்ந் தவர்களான திருமலை நம்பிகள் அனந் தாழ்வான் ஆகிய இருவரின் அனு மதியை ஆதரித்து இவருடைய ஸ்தானத்தில் வேறொருவரை நிய மிக்கக் கடவாய். இப்படிப்பட்ட ஏகாங்கி ஒருவர் இல்லாவிடில் பெரு மாள் கைங்கரியங்கள் குறையற நடைபெற மாட்டா. ஆதலால் அவ சியமாகக் கீழ்க்கூறியபடி உத்தரவுப் பத்திரிகை வெளிப்படுத்தக் கடவா' யென்று நியமித்து அதை வெளியிட வும் செய்து அர்ச்சகர் பரிசாரகர் மற்ற அதிகாரிகள் ஆகிய யாவரை அந்த ஏகாங்கி ஸ்ரீ வைஷ்ணவருக்கு அடங்கி நடக்கும்படிச் செய்து அவர் மூலமாகத் திருவேங்கடமுடையானு டைய தொண்டுகள் அனைத்தும் நடை பெறச் செய்தருளினர்.

இங்ஙனம், இராமாநுச முனிவர் தம்முடைய ஸ்தானத்தில் ஸ்ரீசேனா பதியதி என்னும் மறுபெயரைப் பெற்ற விஷ்வக்ஸேன ஏகாங்கியை நிலைபெறுத்தி, திருமலை நம்பிகளால் தமக்கு அளிக்கப்பட்ட சக்ரவர்த்தி திருமகனுக்குத் திருவாராதனம் செய் யும்படி அவரை ஏற்படுத்திச் சிந்தை யில் கவலையற்று, முன்பே கீழ்த் திருப்பதியில் பிரதிஷ்டை செய்விக் கப்பட்டவராய் ஆண்டாளோடு சேர்ந்த திருச்சித்திரகூட நாதரான ஸ்ரீ கோவிந்தராஜப் பெருமாளுடைய திவ்யைச்வர்யத்தையும் இடையூ றின்றி நன்றாகக் காப்பாற்ற வேணு மென்று யாதவராஜனுக்கு உத்தர விட்டு ஸ்ரீரங்க நகரத்துக்குச் சென்று சேர்ந்து அவ்வப்போது திருவேங்கட மலையின் வைபவத்தையும் ஆராய்ந்து வந்தனர்.

(தொடரும்)

# ★ கீதை காட்டும் நல்வழி ★

தெய்வாஸுர ஸம்பத் விபாக யோகம்
அத்தியாயம்—16.
பகுதி—6.

த்வெள பூதஸர்கௌ லோகேஸ்மின்
தைவ ஆஸுர ஏவ ச |
தைவோ விஸ்தரசஃ ப்ரோக்த
ஆஸுரம் பார்த்த மே ச்ருணு ||
(16-6)

'பார்த்தா! தெய்விகம் என்றும் அசுரம் என்றும் இருவகை உயிர்ப் பிறப்புகள் இவ்வுலகில் உண்டு. தெய்வ இயல்பு விரிவாகப் பகரப் பட்டது. அசுர இயல்பை என்னிடம் கேள்'.

உயிர் வகைகள் அனைத்திடத்தும் ஏற்றத் தாழ்வுகள் உண்டு. அவற்றின் அடிப்படையில் அவற்றை தெய்வ சம்பத்துடன் கூடியவை, மற்றும் அசுர சம்பத்துடன் கூடியவை என இரண்டு வகையாகப் பிரிக்கலாம். 'பூதஸர்கௌ' என்ற வார்த்தை தோற்றத்துக்கு வந்துள்ள உயிரினங்கள் அனைத்தையும் மொத்தமாகக் குறிக்கின்றன. விலங்குகள், செடிகள், பறவைகள், மரங்கள், அரக்கர்கள் உட்பட இந்தத் தெய்வாஸுர ஸம்பத்துக்களுடன் கூடியவைகளாகவே உள்ளன. அரக்கர்களில் ஒருவனான விபீஷணன் இராமனிடம் கொண்ட பக்தியின் காரணமாக விபீஷணாழ்வார் என்று போற்றப்படவில்லையா? ஜடாயு என்ற பறவை இராம பக்தியின் காரணமாகப் பெறற்கரிய பெருநிலையை அடையவில்லையா? சீதை அசோக வனத்தில் சிறையிருக்கையில் இராவணனது ஆணையை நிறைவேற்ற வேண்டி அத்தனை அரக்கிகளும் அவளைப் பயமுறுத்திக் கொண்டிருக்கையில் அவர்களில் ஒருத்தியாகிய திரிஜடை என்பவள் மட்டும் சீதையிடம் தனி அன்பு காண்பிக்கவில்லையா? பாம்பின் விஷம் பொதுவாக உயிரைப் போக்கும் என்றாலும் அதே விஷம் சிறிய அளவில் அருமருந்தாகப் பயன்படவில்லையா? இவ்விதம் உலகில் எங்குப் பார்த்தாலும் தெய்வ அஸுர இயல்புகள் இணைந்தே காணப்படுகின்றன. தெய்வ ஸம்பத் இனியது, ஆத்ம சாதனத்தின் முன்னேற்றத்திற்கு உதவுவது, இறைவன் பால் இட்டுச் செல்ல வல்லது. அசுர இயல்போ இன்னாதது, ஆத்ம சாதனத்திற்கு முரணானது, இறைவனிடமிருந்து நம்மைப் பிரிப்பது.

கீதையில் பொதுவாக நேரிடைக் கருத்துக்களே கூறப்படுகின்றன. என்றாலும், ஆங்காங்கு சில இடங்களில் எதிரிடை இயல்புகள் பற்றியும் பகவான் குறிப்பிடுகிறார். இது எதற்காக என்றால் எதிரிடைகளைப் பற்றித் தெரிந்து கொண்டால் அவற்றைத் தவிர்த்து நேரிடையில் நாட்டம் செலுத்த வேண்டும் என்பதற்காகவே யாகும்.

அசுர இயல்புகள் பற்றிப் பகவான் இனி எடுத்துரைக்கிறார்.

ப்ரவிருத்திம் ச நிவ்ருத்திம் ச
ஜனா ந விதுராஸுராஃ |
ந செளசம் நாபி சாசாரோ
ந சத்யம் தேஷு வித்யதே ||
(16-7)

'செய்யத் தகுந்த நல்வினையையும், தகாத தீவினையையும் அசுர இயல்புடையார் அறியார். அவர்களிடம் தூய்மையும் நல்லொழுக்கமும் வாய்மையும் இல்லை'.

எது செய்யத் தகுந்தது? எது நமக்கும் பிறருக்கும் நலத்தைத் தருமோ அது செய்யத் தகுந்தது. எது செய்யத் தகாதது? எது நமக்கும் பிறருக்கும் நலத்தைத் தராதோ அது செய்யத் தகாதது. 'आत्मनः प्रतिकूलानि परेषां न समाचरेत्'- (ஆத்மனஃ ப்ரதிகூலானி பரேஷாம் ந சமாசரேத்) 'தனக்கு எது இன்னாததோ அதைப் பிறருக்குச் செய்யாதே' என்பதுவே சான்றோர் வாக்கு. இது செய்யத்தக்கது, இது செய்யத் தகாதது என்ற வேறுபாடு எல்லாம் அசுர இயல்பு உள்ளோரிடம் கிடையாது. விலங்குகளிடம்கூட நலம் பொலம் ஆகியவற்றைப் பகுத்துணரும் பாங்கு காணப்படுகிறது. ஆனால் அசுர இயல்புடையவர்கள் விலங்குகளைக் காட்டிலும் கீழானவர்கள். அவர்களது மனத்தில் எழும் எண்ணங்கள் தூய்மையற்றவை. அவர்கள் பேசும்

திரு. டி. கே. நாராயணன், M.S.c., M.Phil.,
ஆசிரியர் "சமயஜோதி" மதுரை.

சொற்கள் உண்மைக்குப் புறம்பானவை. அவர்களது செயல்கள் ஒழுக்கத்திற்கு மாறானவை. ஆக எண்ணம், சொல், செயல் ஆகிய முக்கரணங்களும் அவர்களிடம் நெறி தவறிக் காணப்படுகின்றன.

இன்றைய உலகத்தைச் கொஞ்சம் உற்றுப் பாருங்கள். என்ன காண்கிறீர்கள்? எங்கு நோக்கினும் கலியின் கோரதாண்டவம் காணக் கிடைக்கிறது. வகை வகையான முறைகளில் தர்மம் சிதலமடைந்து காணப்படுகிறது. பெருவாரியான மக்களுக்கு அவர்கள் கண்டதுதான் காட்சி, கொண்டதுவே கோலம், எப்படியாவது பணம் சம்பாதிப்பது, சம்பாதித்த பணத்தை எப்படி எப்

படியோ செலவழிப்பது, பின்னர் உடல் மற்றும் உள வியாதிகளுக்கு இலக்காகிப் பரிதவிப்பது. இன்றைய மக்களின் பொதுவான வாழ்வை இப்படிச் சுருக்கமாகச் சொல்லி விடலாம். சாஸ்திர அறிவு, தர்ம அதர்ம வழிகள், தூய்மை நன்னடத்தை இவற்றைப் பற்றியெல்லாம் அவர்களுக்கு ஒன்றுமே தெரியாது. அது மட்டுமல்லாது, நன்னெறியில் நிற்பவர்களை, தூய வாழ்வு வாழ்பவர்களை அவர்கள் இழித்துரைப்பர்; கேலி செய்வர். சிறிய வயதில் ஆன்மீக மற்றும் தெய்வ நாட்டம் கொண்டு விளங்குபவர்களைப் பார்த்து இத்தகையவர்கள், 'ஆமாம், எங்களுக்குத் தெரியாதது இவர்களுக்குத் தெரிந்துவிட்டதாம்! பிஞ்சிலேயே பழுத்தவர்கள் இந்த வயதில் வாழ்க்கையை அனுபவிப்பதை விட்டு விட்டு சத்சங்கமாம், தெய்வீகமாம்! சரியான பத்தாம்பசலிகள்' என்றெல்லாம் சொல்லிப் பரிகாசம் செய்வார்கள். இவர்களை அசுர குணம் படைத்தவர்கள் என்று அறிக என்று பகவான் நம்மைப் பார்த்து எச்சரிக்கை செய்கிறார்.

இத்தகையவர்கள் ஏன் அவ்வாறு தாறுமாறாக நடந்து கொள்கிறார்கள் என்று கேட்டால் அவர்களிடம் கீழ்க் காணும் விடை வருகிறது.

அஸத்யம் அப்ரதிஷ்டம் தே
ஜகதாஹுரனீஸ்வரம் ।
அபரஸ்பர ஸம்பூதம்
கிமன்யத் காம ஹைதுகம் ॥ (16-8)

'உலகம் உண்மையில்லாதது, தர்ம நிலையில்லாதது, கடவுளில்லாதது. காமத்தை அடிப்படையாகக் கொண்டு ஆண், பெண் சேர்க்கையாலானதன்றி வேறு என்ன இருக்கிறது!' என்கின்றனர்.

நாத்திகவாதிகள் என்ன சொல்லுவர் என்பதை பகவான் இங்கே அழகாக எடுத்துரைக்கிறார். நாத்திகவாதிகள் கூறுவது விஞ்ஞான அடிப்படையில் உண்மை போலத் தோன்றலாம். ஆனால் ஆராய்ந்து பார்க்குமிடத்து உண்மை விளங்கும்.

நாத்திகவாதிகள் அதாவது லௌகிகர்கள் எப்படி இறைவனை மறுக்கிறார்கள் என்பதைச் சுருக்கமாகக் கீழே காண்போம். நாத்திகவாதி சொல்கிறான்.

"கடவுள் கிடையாது. கிடையவே கிடையாது. கடவுளை நம்புபவன் முட்டாள். பொருளின் அதாவது அணுக்களின் சேர்க்கையால் உருவானதே இவ்வுலகம். ஆண் பெண் சேர்க்கையால் உருவானவனே மனிதன். இதிலே கடவுளுக்கு என்ன வேலை?"

இவ்வுலகில் உள்ள அனைத்துப் பொருட்களும் ரசாயன மூலகங்களால் ஆனது. எலக்ட்ரான், புரோட்டான் சேர்க்கையால் அணுக்களும், அணுக்களின் சேர்க்கையால் மூலக்கூறுகளும், சிறிய மூலக்கூறுகள் (Molecules) பலவற்றின் சேர்க்கையால் புரோட்டீன் மற்றும் நியூக்ளிக் அமிலங்கள் போன்ற பெரிய மூலக்கூறுகளும் உண்டாகின்றன. இந்த அணுக்கள், சிறிய மற்றும் பெரிய (Macromolecules) மூலக்கூறுகள், புரோட்டீன்கள், நியூக்ளிக் அமிலங்கள் எல்லாம் இணைந்து ஒரு செல் உயிரினங்களில் காணப்படும் உயிர் செல்களாக மாறுகின்றன. இத்தகைய கோடிக்கணக்கான செல்களின் தொகுப்பால் விலங்குகள் மனிதன் போன்றவை உருவாகின்றன; தந்தையிடமுள்ள D. N. A. (Deoxy Nibonucleic Acid) மூலக்கூறும், தாயிடம் உள்ள D. N. A. மூலக்கூறும் சேர்ந்து அவர்களது சேர்க்கையின் போது இணைந்து சிசுவின் கருவிற்கு வித்தாகிறது. இங்கே கடவுளுக்கு என்ன வேலை? சரி கடவுள் என்று ஒருவர் இருப்பாரேயாகில் ஏன் மரணம் நிகழ வேண்டும்? அவரை நம்பும் பக்தர்களுக்கு அவர் அழியாத வரம் அளிக்கலாகாதா?

(தொடரும்)

# இராம சரித மானஸ்

துளசிதாசர் இராமபிரான் பால் அளவற்ற பக்தி கொண்டிருந்தார். இராம நாமமே தின்மையையும், பாவத்தையும் சிதைந்து தேய்க்கச் செய்யும் திருமந்திரம் என்பதை உணர்ந்திருந்த அவர் எந்நேரமும் இராம நாமத்தையே ஜபித்துக் கொண்டிருந்தார். இராம நாம மகிமையினுல் ஆழ்ந்த தவயோகியாய் அவர் விளங்கினார். இவரது தவ வலிமையின் பயனாக அந்த அதிசயம் நிகழ்ந்தது. இராட்சத உருக்கொண்டிருந்த பூதம் ஒன்று திடீரென ஒரு நாள் அவர் முன்பு தோன்றி 'ஐயனே! தங்கள் திருவடி ஸ்பரிசத்தினால் எனது முன்னுளைய சாபம் நீங்கியது. இன்று தூய்மைபெற்றேன். தாங்கள் எனக்கு எப்பணியை இட்டாலும் அதை செய்து முடிப்பேன். கட்டளை இடுங்கள்'' என வணங்கி நின்றது. இதைக் கண்டு வியப்படைந்த துளசிதாசன் மனம் மகிழ்ந்து 'எனக்கு ஸ்ரீராமபிரான் தரிசனம் கிட்ட வழி கூறு' என்று கூறினார்.

அவரது வேண்டுதலைக் கேட்ட அப்பூதம் அதற்கு விடையாக, "ஐயனே! ஸ்ரீராம தரிசனம் கிட்டவேண்டுமெனில் அதற்கு முன் இராம தூதனின் அருளைப் பெறவேண்டும்'' என்று கூறியது. பூதத்தின் பதிலைக்கேட்ட துளசிதாசர் அன்று முதல் அநுமனின் அருள்பெறவேண்டி தவம் செய்யத் துவங்கினார். அவரது கடுந்தவத்தைக்கண்டு மனம் மகிழ்ந்து அநுமன் அவர் முன்பு பிரசன்னமாகி நின்றார். அநுமனின் தரிசனம் கண்டு உளம் மகிழ்ந்த துளசிதாசர், அநுமனிடம் 'ஸ்வாமி! எனக்கு ஸ்ரீ இராம தரிசனம் கிட்ட அருள்புரிய வேண்டும்' என்று வேண்டி நின்றார். அதைக் கேட்ட அநுமன் 'நாளைக்கே உமது இல்லத்தில் ஸ்ரீ இராமபிரான் எழுந்தருளுவார்' என்று உரைத்தார். அநுமனின் உரை கேட்ட துளசிதாசரின் மனம் சூரியனைக் கண்டு மலர்ந்த தாமரை போல் மலர்ந்தது.

வீடு திரும்பிய துளசிதாசர் வீட்டை அலங்கரிக்க முற்பட்டார். தமது வீட்டின் முன்பு பெரும் பந்தலை அமைத்தார். வாழை மரங்களை அதில் கட்டி, மாவிலைத் தோரணங்களை அமைத்தார். தனது உற்றார் உறவினர்களையும், இராம பக்தர்களையும் தமது இல்லத்திற்கு வரும்படி அழைப்பு விடுத்திருந்தார். அதன்படி அவரது இல்லத்திற்கு வந்திருந்த பக்தர்கள் இராமநாம சங்கீர்த்தனம் செய்து கொண்டு இருந்தனர்.

அச்சமயத்தில் அவரது இல்லத்தின் மையத்தில் பேரொளி ஒன்று தோன்றியது. அப்பரந்த ஒளியின் நடுவே ஸ்ரீஇராமபிரான், லக்ஷ்மணன் சீதா தேவி, ஆஞ்சநேயர் சமேதராய் எழுந்தருளியிருந்தார். அக்காட்சியைக் கண்டு உள்ளம் உருகி நின்ற பக்தர்களும், துளசிதாசரும் எம்பெருமானை சேவித்து நின்றனர்.

எம்பெருமான் துளசிதாசரை நோக்கி, "துளசிதாசரே எமது சரித்திரத்தை உமது மொழியில் பாடுவீராக. அவ்வாறு உம்மால் பாடப்படும் இராம காதைக்கு 'இராம சரித மானஸ்' எனும் பெயரைச் சூட்டுவாயாக! உலகில் பல காலம் இறைப்பணியாற்றிய பின் எமது திருவடியை அடைவாய்!'' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

இதைக் கேட்ட துளசிதாசரும், 'ஸ்வாமி! இப்பெரும் பணியைச் செய்ய அடியேனுக்கு ஆற்றல் ஏது? எப்படி இயலும்?' என வினவினார்.

அதற்கு எம்பெருமான், 'ஆஞ்சநேயர் உமக்கு உபதேசிப்பார்' என உரைத்து மறைந்தார். இறைவனின் திருவுருவம் நிதர்சனமான போதிலும் அந்த தெய்வ தரிசனம் அவரது மனத்தைவிட்டு அகலவில்லை. துளசிதாசரும் அவரது குடும்பத்தாரும் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினர். ஆஞ்சநேயரும் அவருக்கு உபதேசித்து அருளினார்.

துளசிதாசர் அதன்பின் இராமபிரானையும், ஆஞ்சநேயரையும் தொழுது தமது மொழியில் இராம காதையைப் பாடினார். இறைவனின் திருவுள்ளப்படி அதற்கு இராம சரித மானஸ் எனும் பெயரைச் சூட்டினார். அதுவே இன்று, 'துளசி இராமாயணம்' என்றும் அழைக்கப்படுகிறது.



திரு. கே. இராமநாதன், பி.ஏ.,
சேலம்-6.

## அறிவிப்பு

ஸப்தகிரிக்கென்று ஒரு வருடம் அல்லது அதற்கு மேற்பட்ட காலத்திற்கு அனுப்பப்படும் சந்தாத் தொகை மட்டுமே ஏற்றுக்கொள்ளப்படும். ஒரு வருடத்திற்கும் குறைவான கால அளவுக்காக அனுப்பப்படும் சந்தாத் தொகை ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.

ஆண்டுச் சந்தா ரூ. 12/-

# பகையும் பக்தியே

(பகவானிடம் பக்தி செய்யும முறைகள் சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதஸேவனம், அர்ச்சனம், வந்தனம், தாஸ்யம், ஸக்யம், ஆத்ம நிவேதனம் என்று ஒன்பது வகைகள் இருப்பதாக ஆன்றோர் கூறுவர். ஆனல், இறைவனிடம் பகைமை பூண்டு, அவ்வகையிலும் அவனை அடைவது என்பது சற்று அதிசயமாகத் தோன்றுகிறது அல்லவா? பக்தியில் பத்தாவது வகை எனக் குறிப்பிடக் கூடிய இம்முறையிலும் கடவுளை அடைந்தவர்களின் வரலாறுகளைப் புராணங்களில் காணலாம்; இதற்கு சிசுபாலனின் கதை சிறந்ததோர் எடுத்துக் காட்டு.)

சிசுபாலன் சேதிநாட்டின் அரசன். அவனுடைய தந்தை தமகோஷன்; தாயார் சாத்வதி.

சாத்வதி கிருஷ்ணனுக்கு அத்தை;

சிசுபாலன் பிறந்த போது அவனுக்கு மூன்று கண்களும் நான்கு கைகளும் இருந்தன.

குழந்தையின் விகார உருவத்தைக் கண்டு அச்சமும் வியப்பும் மேலிட்டு பெற்றோர்கள் துயரடைந்தனர்.

அப்போது, 'எவன் இக்குழந்தையை எடுத்துக் கொள்ளும் போது இதன் அதிகப்படியான கண்ணும் கைகளும் மறைந்து போகின்றனவோ, அவனே இதன் மரணத்திற்குக் காரணமாவான்' என்று அசரீரி ஒலித்தது.

சிசுபாலனின் பெற்றோர்களும் குழந்தையைப் பார்க்க வருவோரிடமெல்லாம் அதைக் கொடுப்பார்கள்.

அத்தையைப் பார்ப்பதற்குக் கிருஷ்ணனும் பலராமனும் ஒருமுறை வந்தனர். அவளும் அவர்களை அன்புடன் உபசரித்து, குழந்தையை முதலில் பலராமனிடமும், பின்னர், கிருஷ்ணனிடமும் கொடுத்தாள்.

குழந்தையைக் கிருஷ்ணன் கைகளில் எடுத்துக்கொண்ட உடனேயே அதிகப்படியான இருகைகளும் மூன்றாவது கண்ணும் மறைந்து போயின.

சாத்வதிக்கு ஒருபுறம் மகிழ்ச்சியாயிருந்தாலும், மறுபுறம் கிருஷ்ணனே சிசுபாலனின் மரணத்திற்குக் காரணமாக இருக்கப் போகிறான் என்பது அவளுக்கு வருத்தத்தை அளித்தது.

அவள் கிருஷ்ணனிடம் "கண்ணா! இக்குழந்தை ஒருவேளை தீயவனாக ஆகி உனக்கு விருப்பமில்லாத வகையில் நடந்து கொண்டாலும் கூட, நீ இவனுடைய நூறு தவறுகளை எனக்காக மன்னிக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டாள்.

கண்ணனும் அத்தையின் கோரிக்கைக்கு இணங்கி, அவ்வாறே செய்வதாக வாக்களித்தான்.

சிசுபாலன் வளர்ந்து பெரியவன் ஆனதும், தீயவர்களுடன் நட்பு பூண்டு, தர்மத்திற்கு எதிரான காரியங்களைச் செய்வதில் ஈடுபட்டான். தவறுகளைச் செய்வதில் மகிழ்ச்சியும் கொண்டான். பெரியோர்களின் அறிவுரையைப் புறக்கணித்து, அவர்களை எள்ளி நகையாடவும் துணிந்தான்.

கிருஷ்ணனுக்கு இவை எல்லாம் தெரிய வந்தாலும், தனது அத்தைக்குக் கொடுத்திருந்த வாக்குறுதிக்காக, அவன் சிசுபாலனை ஒன்றும் செய்யாது வாளாவிருந்தான்.

அஸ்தினபுரியில் பாண்டவர்களின் அரசு உரிமைக்கு ஊறு ஏற்பட்ட போது, கிருஷ்ணன் அவர்களுக்கு உதவி செய்தான்; அவர்களும் அவனுக்கு இன்னொரு அத்தையான குந்தியின் குழந்தைகளே. அவர்கள் அறநெறியில் நின்று வந்ததனல், அவன் அவர்களுக்குத் துணையாக இருந்து வந்தான்.

வெற்றி வேந்தனல் செய்யப்படும் வேள்வியான ராஜசூயம் என்னும் யாகத்தைத் தருமனும் அவனுடைய சகோதரர்களும் நடத்தினர்.

மறை பயின்ற அந்தணர் பலருக்குப் பலவகைப் பொருள்களைத் தானம் செய்தனர். வேள்விக்கு வந்திருந்த அரசர்கள் அனைவருக்கும் அவரவர்களுக்குத் தக்கவாறு மரியாதை செய்து கவுரவித்தனர்; அக்னியின் மூலமாக வெவ்வேறு தேவதைகளுக்கும் மந்திரங்களுடன் அவிசொரிந்து அவர்களை மகிழ்வித்தனர். மாபெரும் அளவில் அன்னதானம் செய்யப்பட்டது. எங்கு பார்த்தாலும் மக்கள் தருமனையும் பாண்டவர்களையும் புகழ்ந்தவாறே இருந்தனர்.

---

## ஆலம்

---

அரசரும் அந்தணரும் அறவோரும் ஆன்றோரும் நிறைந்திருந்த மாபெரும் அவையில் குருவம்சத்து முதியவரான பீஷ்மர் எழுந்து நற்குணங்கள் நிறைந்து புகழொளியுடன் விளங்கும் புருஷோத்தமனுகிய கிருஷ்ணனுக்கு அர்க்யம் (வணக்கத்திற்குரிய பெரியோரை வரவேற்கும் போது அவரைக் கௌரவிக்கும் பொருட்டு வழங்கப்படும் புனித நீர்) அளிக்கும் படி பணித்தார்.

பீஷ்மரின் கட்டளைப்படி, சகதேவன் கொண்டுவந்த அர்க்யத்தை, ஆயிரம் அமுதக் கிரணங்களினுல் மக்கள் அனைவரையும் மகிழ்விக்கும் முழுமதிக்கு ஒப்பான கிருஷ்ணனுக்கு தருமன் வழங்கி வணங்கினன்.

இதைக் காணப்பொறுக்காமல் அவையில் சிசுபாலன் வெகுண்டு எழுந்து "தருமரே! வணக்கத்திற்குரிய சான்றோர் இவ்வளவு பேர் இங்கே இருக்கும் போது, பீஷ்மரின் தவறான ஆலோசனையைக் கேட்டு கிருஷ்ணனைக் கவுரவித்து உமது அறிவின்மையை வெளிப்படுத்திவிட்டீர்; பீஷ்மருக்கு வயதாகி விட்டது. முதுமையடைந்தோரின் மனம் சலனமுள்ளது அல்லவா?

கிருஷ்ணன் உமக்கு வேண்டியவனாயிருந்தால், அவனுக்கு நிறையச் செல்வத்தைக் கொடுக்கலாம். உமக்கு விருப்பமானவற்றைக் கொடுக்கலாம். உமக்கு விருப்பமானவற்றை எல்லாம் அவனுக்குச் செய்யலாம்.

ஆனால் வணங்குவதற்கு எத்தனையோ பேர் அவையில் இருக்க, ஒரு தகுதியுமில்லாத இந்த இடைச்சிறுவனுக்கு முதற்கவுரவம் அளித்து, இங்குக் கூடியிருக்கும் மாமன்னர்களை எல்லாம் அவமானப்படுத்தி விட்டீர்.

கிருஷ்ணன் வசுதேவரைக் காட்டிலும் சிறந்தவன் என்று எண்ணிக் கவுரவித்தீரா?

ஒரு கால் நீர் கவுரமளிக்கத் தீர்மானித்தாலும் கூட அதை எப்படி ஏற்றுக் கொள்ள ஒத்துக் கொண்டான்? எல்லோருக்கும் உபதேசம் செய்யும் அவனுக்கே இது தெரிய வேண்டாமா? இவனைக் கவுரவிப்பது அலிக்குத் திருமணம் செய்து வைப்பதற்கு ஒப்பான செயலாகும்", எனப் பலவகையிலும் கிருஷ்ணனையும், பிறரையும் தூற்றிவிட்டு, அவையிலிருந்து நண்பர்களுடன் வெளியேறினான்.

பொறுமைக்கு ஓர் இலக்கணமாகத் திகழும் தருமர் அவனைச் சமாதானப்படுத்தி அழைத்து வந்து கூறினார்:

"நற்குணங்கள் நிரம்பியவன் கடுஞ்சொற்கள் சொல்வது அழகன்று. சொல்லின் கடுமை நஞ்சை விடவும், தீயைக்காட்டிலும் ஆபத்து அளிக்கக் கூடியது! அனைத்துலகையும் படைக்கும் பிரமனையே படைத்தவன் அல்லவா கிருஷ்ணன். ஆகவே நாம் கிருஷ்ணனைக் கவுரப்படுத்தியது முறையே."

ஆனால், தருமனின் சொற்கள் அவன் காதில் ஏறவில்லை.

பீஷ்மர் மீண்டும் எழுந்து "இங்கே கூடியிருக்கும் அரசர்கள் அனைவரும் கிருஷ்ணனின் அருளால்தான் அரசு புரிகின்றனர்; அவனுக்கு முதல் மரியாதை செய்தது அவர்களுக்கு உடன்பாடே ஆகும்" என்று சொன்னார்.

பீஷ்மரின் வாதம் சிசுபாலனின் தவற்றைச் சுட்டிக்காட்டுவது போல் இருந்ததால், அவனது சினம் கட்டு மீறிப் போயிற்று. ஆத்திரம் கொண்டு "இந்தக் கிருஷ்ணன் பெண்ணையும் பசுவையும் கொன்ற பாவி. பீமனைக் கொண்டு ஜராசந்த மன்னனை அக்கிரமமான முறையில் கொன்றவன். இவன் செய்துள்ள அடாத செயல்களைச் சொல்லுவதற்கு எனது நாவு கூடக் கூசுகிறது", என நிந்தனை செய்து, பீஷ்மர், தருமர் ஆகியோரையும் அவன் தகாதவார்த்தைகள் சொல்லிப் பழித்தான்.

அதோடு நிற்காமல், "தருமரின் இந்தச்செயலை நான் ஏற்றுக்கொள்ளவில்லை. வல்லமை இருந்தால், வாருங்கள் என்னுடன் போருக்கு" என்று சிசுபாலன் கூவியழைத்து வாளை உருவினான்.

நூறு தவறுகள் புரியும் வரை காத்திருந்த கிருஷ்ணன், ஆட்சி வெறி மிகுந்த, தர்மத்தை மதிக்காத, பெரியோரை அவமதிக்கும் சிசுபாலனின் செருக்கை இனியும் பொறுப்பதற்கில்லை எனக் கருதி, சக்ராயுதத்தினால் அவன் தலையைத் துண்டித்தான்.

ஆனால், என்ன அதிசயம்! சிசுபாலனின் உடலினின்றும் ஜோதி ஒன்று கிளம்பி, கிருஷ்ணனுடன் கலந்தது! அங்கிருந்தவர்களுக்கு ஒன்றும் விளங்கவில்லை.

கிருஷ்ணனே அவர்களுக்கு அதற்கான பின்னணியை விளக்கிச் சொன்னான். "முன்பு ஒருசமயம் வைகுண்டத்தின் காவலரான ஜயன், விஜயன் இருவரும் எனது பக்தனை அவமதித்ததனால் அவர்களுக்கு நான் தண்டனை அளிக்கும்படியாயிற்று. நூறு பிறவிகள் நண்பர்களாயிருந்து விட்டு என்னிடம் வருகிறீர்களா அல்லது மூன்று பிறவிகள் பகைவர்களாயிருந்து விட்டு என்னிடம் வருகிறீர்களா என்று கேட்டேன். விரைவிலேயே என்னிடம் சேரவிரும்பிய அவர்கள் மூன்று பிறவிகள் பகைவர்களாயிருந்து விட்டே வருகிறோம் என்று கூறினர்.

அவர்களே இரணியன், இரணியாட்சன், இராவணன், கும்பகர்ணன், சிசுபாலன், தந்தவக்ரன் என்று பிறவி எடுத்து, எனக்குப் பகைவர்களாயிருந்தனர். அவர்கள் என்னிடம் பகைமை கொண்டிருந்தாலும் என்னிடம் பக்தி கொண்டவர்களே ஆவர்."

பகையும் பக்தியாக கருதப்படுவதை அறிந்த அவையில் இருந்தோர் அனைவரும் ஆண்டவனின் விளையாட்டினை நினைந்து வியந்தனர். ★

கன்னிப் பெண்களுக்கு விரைவில் திருமணம் நடக்க, கீழ்க்கண்ட சுலோகத்தை, தினமும் 3 முறை கூறிப் பசுவை வலம் வரவேண்டும்.

" கவாமங்கேஷு திஷ்டந்தி
புவனானி சதுர்தஸ,
யஸ்மாத் தஸ்மாச் சிவம்
மே ஸ்யாத் இகலோகே பரத்ர ச!! "

நடாதூர் வி. திருமகள்.

# வைணவ வினா - விடை

வித்வான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசார்யர்.

வால்மீகியின் சரித்திரம் என்ன?

"வால்மீகம்" என்றால் புற்று. ச்ரோத்ரம் ஹ்யேதத் ப்ருதிவ்யா:! யத் வல் மீக: என்ற வேத வாக்கியப்படிக்கு புற்றைப் பூமியின் காது என்பர், கர்ணன் போல், வால்மீகியும் அந்தப் புற்றிலிருந்து பிறவி எடுத்ததாகக் கதை இருப்பதால் இவரை "வான்மீகி" என்கிறார்கள். இவர் ஒரு மாபெரும் முனிவர். பரத்வாஜருடைய குரு. இவர் இராமர் காலத்தவர். ஜனகருடைய நண்பர். இவர் ஒரு கோத்ரப் பிரவர்த்தகர். இவருக்குப் "ப்ராசேதஸ்" என்று பெயர். "ப்ரசேதஸ்" என்பது வருணனுக்குப் பெயர். ஆகவே வருணனுடைய குலத்தில் பிறந்தவர் என்றும், அவருக்குப் பேரன் எனவும் கூறுவதுண்டு. அல்லது "ப்ரசேதஸ்" என்ற ஒரு அந்தணருடைய பிள்ளை எனவும் கூறுவார்கள். இவர் வேட குலத்தில் பிறந்து "ருக்ஷன்" என்ற பெயருடன் குடும்பத்தைக் காக்க வழிப்பறிச்செய்து பிழைத்து வந்தார். ஒரு சமயம் சப்தரிஷிகளையும் வழிப்பறிச்செய்தார். அப்பொழுது அவர்கள் இவரது முகத்தின் தேஜஸைக்கண்டு வியந்து இவரை நல்வழிப்படுத்தவேண்டும் என நினைத்தார்கள்; இவருக்கு முதலில் குடும்பத்தில் தானாகவே ஒரு வெறுப்பை ஏற்படுத்தவேண்டும் எனக்கருதிய அவர்கள் 'நீ செய்யும் இச்செயல் மிக்க பாபமானது;இந்தப்பாபத்தால் நீ ஒரு நாள் மிகவும் கஷ்டப்பட்டாக வேண்டும்; ஆனால் இந்தச் செயலால் சம்பாதிக்கும் பணத்தில் பங்குபெறும் உன் குடும்பத்தினர் நீ செய்து வரும் பாபத்திலும் பங்குபெற விரும்புகிறார்களா என அறிந்து வா" என்றனர். இவருக்கு ஞானம் பிறக்கும் நல்ல காலம் வந்தபடியால், அவர்கள் உத்தரவுப்படி வீட்டுக்குச் சென்று ரிஷிகள் கூறியபடிக் கேட்டார். குடும்பத்தாரர்கள் இவர் செய்யும் பாபத்தில் பங்கு பெற மறுத்தார்கள். அதனால் இவருக்கு உடனே, குடும்பம், மக்கள் இவர்களின் சுயநலம் புரிந்துவிடக் குடும்ப வாழ்வில் ஒரு வெறுப்பும் ஏற்பட்டது. இவ்வாறு சட்டென ஒரு வெறுப்புணர்ச்சி ஏற்பட அந்த மகான்களின் அருள் பார்வை பட்டதே காரணமாயிற்று; ருக்ஷன் திரும்பி வந்து சப்த ரிஷிகளின் காலில் விழுந்து "மனிதனுக்குச் சுயநலமற்ற நீண்ட பந்து யார்? அவரை நான் அடைய வழி என்ன என்பதை உபதேசிக்கவேண்டும்" என்று வணங்கிக் கேட்டார். அதற்கு அவர்கள் "மனிதனுக்கு உண்மையான நிலைத்த பந்து பகவான் ஒருவனே. அவன் கருணைக்கடல். நம்மிடமிருந்து அவன் எதையும் எதிர் பார்ப்பதில்லை. நம் தூய பக்தியைத் தான் எதிர்பார்க்கிறான். மற்றைய பந்துக்கள் அனைவரும் எதற்கும் இயலாதவர்கள். சுய நலம் உள்ளவர்கள். அவர்களையே நம்பி மனிதன் வாழ்வது மண் குதிரையை நம்பி ஆற்றில் இறங்குவதற்கு ஒக்கும். அதனால் நீயும் அவனையே பணிந்து நல்ல நிலையை அடையலாம்; அந்த பகவான் நம்மைக் காக்கவே பல அவதாரங்கள் எடுத்துள்ளார். இந்த வைவஸ்வத மந்வந்தரத்தில் இதுவரை அந்த பகவான் எடுத்த அவதாரங்கள் ஒன்பது. இந்த ஒன்பதிலும் ஸ்ரீ நரசிம்மன், ஸ்ரீராமன், ஸ்ரீகிருஷ்ணனாகிய அவதாரங்கள் மூன்றும் முக்கியம். இம்மூன்றிலும் திருப்பெயர் மூர்த்தி என்ற தனிப்பெருமை கொண்டவரும் கருணையே வடிவானவரும், சரணாகதி ரகசியத்தை உலகுக்கு வெளியிட்டவரும், வேடன், குரங்கு, கரடி அரக்கன் என்ற பாகுபாடின்றி எல்லோருடனும் கூடிப்பழகக் கூடிய அவதாரமான ஸ்ரீராமனே சிறந்தவர். இந்த ராமமூர்த்தியை விட அவன் திருப்பெயரான தாரக மந்திரமான, 'ராம' நாமத்துக்கு ஏற்றம் அதிகமானது. மக்களுக்கு எளிதில் விரைவில் நலம் யாவும் தரக்கூடியது. அதனால் அந்த 'ராம' என்ற இரண்டு எழுத்தை நாங்கள் திரும்பி வரும் வரை ஜபம் செய்து கொண்டிரு" என்று ராம மந்திரத்தை உபதேசம் செய்து சென்றார்கள். இந்த ருக்ஷனுடைய ஈனத் தொழிலைக்கருதி ராம நாமத்தை நேரிடையாக உபதேசிக்காமல் "மரா" என உபதேசித்தார்கள். ருக்ஷன் மிகவும் ஈடுபாட்டுடன் உண்ணாமல், இடம்பிறழாமல் பல ஆண்டுகள் "மரா" என்ற மந்திரத்தை ஜபித்து வந்தார்; அப்பொழுது கரையான் புற்று ஏற்பட்டு இவரை மூடி விட்டது; சில வருடங்களுக்குப் பிறகு சப்தரிஷிகள் திரும்பி வந்து, புற்றண்டை நின்று இவரை அழைத்தார்கள். உடனே அந்தப் புற்றிலிருந்து ருக்ஷன் வெளிவந்து அவரை வணங்கினார்; அப்பொழுது புற்றிலிருந்து தோன்றியபடியால் இதனை ஒரு பிறப்பாக எடுத்துக் கொண்டு இவரை அன்று முதல் வால்மீகி என அழைக்கலானார்கள். இந்த இவரது சரித்திரம் வால்மீகத்தில் இல்லை. ஆனால் மற்றைய புராணங்களில் உண்டு என்பர். பிருகுவின் வமிசத்தில் தோன்றியபடியால் இவரைப் பார்க்கவர் எனவும்

அழைப்பதுண்டு. வேத காலத்து ருஷிகள் பலர். அவர்கள் பிர்மரிஷி, தேவரிஷி, மகரிஷி, பரமரிஷி, காண்டரிஷி, சுருதரிஷி, ராஜரிஷி என ஏழு வகைப் படுவார்கள். இந்த ரிஷிகளில் ஸப்தரிஷிகள் மிகப் புகழ் பெற்றவர்கள். அவர்கள் விசுவாமித்திரர், ஜமதக்னி, பரத்வாஜர், கௌதமர். அத்ரி, வசிஷ்டர், கச்யர் என்பவராவர். 'ருஷி' என்ற சொல் ''ருஷ=கதௌ'' என்ற வினைப்பகுதியிலிருந்து தோன்றிய சொல். இச்சொல்லுக்கு ஞானக்கண்ணால் எல்லா மந்திரங்களையும் சென்ற மந்வந்திரத்தில் உள்ளபடி அறியும் ஆற்றல் படைத்தவர் எனவும், தனது ஞானத்தின் சக்தியால் சம்ஸார்துக்கத்தை நன்கு அறிந்தவர் எனவும், ஞானம், பிரபஞ்சம் இரண்டின் கரை கடந்தவர் எனவும் பொருள். மந்த்ரங்களைப் பார்ப்பவர்கள் ரிஷிகள் என்பர். இவர்கள் சத்யவாக்யர். இவர்கள் சாபத்தை ஆயுதமாகக் கொண்டவர்கள். இவர்களில் முனிவர்களும் உண்டு. பெரும்பாலும் குடும்பத்துடன் இருப்பவர்களை ரிஷிகள் எனவும், துறவியாக மௌனம் பூண்டு ஆத்ம சிந்தனை பண்ணுகிறவர்களை முனிவர்கள் என்பதும் உண்டு. ருஷி என்ற சொல்லுக்கு வேதம், தேவதை, ஞானத்தைக் கரைகண்டவர், திகம்பரர் எனவும், முனி என்ற சொல்லுக்கு, புத்தர், பலாச மரம், தருப்பை, மௌனமாக இருப்பவர் எனவும் பொருள் உண்டு. அந்த வகையில் வால்மீகி ஒரு மகிரிஷியாவர். பகவான் என்ற சிறப்புப் பெயர் பெற்ற சௌநக பகவான், வியாச பகவான், வசிஷ்ட பகவான் என்பது போல் வால்மீகிக்கும் பகவான் வால்மீகி எனவும் பெயர் உண்டு. ''வால்மீகி; பகவான், ரிஷி:'' என்று இவரைப்பற்றிக் கூறப்படும். இவர் வெளியிட்ட உலகப் புகழ் பெற்ற இதிஹாஸரத்தினமான வால்மீகி இராமாயணத்தில் பல இடங்களில் இன்றைய விஞ்ஞான ரகசியங்களும் மறைவாக உள்ளன. அதனால் இவரை முக்கால மறிந்தவர் என்பர். இவர் ராமருடைய பிள்ளைகளான லவன், குசன் என்பவர்களைச் சிறு வயதில் வளர்த்து அவர்களுக்கு வீணையிலும் இனிய இராமாயணத்தை உபதேசித்தார். தமிழ்ச் சங்க காலத்துப் புலவர்களிலும் ''வால்மீகி'' என்றொரு புலவர் உண்டு என்பர். இவர் வாழ்ந்த இடம் தான் சென்னையில் உள்ள ''திருவான்மியூர்'' என்னும் சிலர் கூறுவதுண்டு. உலகமகாகவி காளிதாஸனுக்கு இராமாயணம் எழுதிய இவ்வால்மீகியிடம் மிகவும் ஈடுபாடு. கம்பரும் இவரைக் கடவுள்போல் மதித்தார்.

(தொடரும்)

# செய்திச் சுருக்கம்

## திருப்பதியிலும் திருமலையிலும் ஆந்திர முதல்வர்

6-4-85 அன்று ஆந்திர மாநில முதல்வர் திரு. என். டி. ராமாராவ் அவர்கள் திருப்பதிக்கும் திருமலைக்கும் வருகை புரிந்து, தி. தி. தேவஸ்தானம் மேற்கொண்ட பல்வேறு திட்டங்களைத் துவக்கி வைத்து, தி; தி; தே. வளர்ச்சிப் பாதையில் ஒரு புதிய அத்தியாயத்தைத் தோற்றுவித்தார். அன்று காலை தி. தி. தே. நிருவாகக் கட்டிட மைதானத்தில் நடைபெற்ற கூட்டத்தில் அவர் முக்கிய விருந்தினராகப் பங்கேற்று உரையாற்றுகையில், உடல் ஊனமுற்ற, தாழ்த்தப்பட்ட மக்களுக்காக தி.தி.தே. ஆற்றி வரும் பொதுநலத் தொண்டுகளையும், மேற்கொண்டு வரும் திட்டங்களையும் புகழ்ந்து பேசினார். இப்பணியில், ஆந்திர அரசும் தன்னாலியன்ற உதவிகளையும் புரிந்திடும் என்று உறுதியளித்தார். திருமலையில் தி. தி. தே. தொடங்கிய இலவச நித்ய அன்னதான திட்டத்திற்கென பம்பாயைச் சார்ந்த ஸ்ரீ மன்சிங்கா அவர்களும், சென்னையைச் சார்ந்த ஸ்ரீ எல். வீ. ராமய்யா அவர்களும் முறையே ரூ. 10 இலட்சமும், ரூ. 20 இலட்சமும் வழங்கியதைப் பாராட்டிப் பேசினார்.

**திருப்பதியில் திருமலைக்குச் சுற்று வழிச் சாலை :**

நாளுக்கு நாள் பெருகி வரும் யாத்திரிகர்களின் வருகையாலும், உருவாகி வரும் தொழிற்கூடங்களாலும் திருப்பதியில் ஜன நெருக்கடி அதிகமாக உள்ளது. இதனால் நகரில் மோட்டார் வண்டிகளின் போக்குவரத்தும் அதிகமாகி, போக்குவரத்தே குறிப்பிட்ட சமயங்களில் ஸ்தம்பித்து போய்விடும் நிலைமையும் ஏற்படுகிறது. இதனைத் தவிர்க்க, நகருக்குள் யாத்திரிகர்கள் வரா வண்ணம், ரேணிகுண்டா சாலையினையும் திருமலைக்குச் செல்லும் திருப்பதி மலை அடிவாரத்திலுள்ள கபில தீர்த்தம் சாலையினையும் இணைக்கும் வண்ணம் ரூ. 58 இலட்சம் செலவில் சுற்று வழிச்சாலை ஒன்றினை ஆந்திர மாநில முதல்வர் அவர்கள் திறந்து வைத்தார். 3 கி. மீ. நீளமும், 7 மீட்டர் அகலமும் கொண்ட இச்சாலையின் பிற்பகுதி பணியினை தேவஸ்தானம் தன் செலவில் மேற்கொண்டது. ரூ. 5 இலட்சம் செலவில் இச்சாலையில் மின்விளக்குகளை தி. தி. தே. பொருத்தியது.

**திருமலையில் இரத்த சேமிப்பு வங்கி:**

மனித வாழ்வின் உயிர் நாடியான இரத்தத்தின் இன்றியமையாமையை மனதிற் கொண்டு, முதல்வர் அவர்களின் அறிவுரைப்படி திருமலையில் இரத்த சேமிப்பு வங்கிக்கான கட்டிடத்திற்காகவும், மருத்துவ கருவிகளுக்காவும் தி தி.தே. ரூ. 7.5 இலட்சம் செலவழித்துள்ளது. இதைத் தவிர ஆண்டு ஒன்றுக்கு இவ்வங்கியினைப் பராமரிக்க ஆகும் செலவான ரூ. 2.5 இலட்சத்தினையும் ஏற்க தேவஸ்தானம் முடிவு செய்துள்ளது. மேற்படி இவ்வங்கியினை ஆந்திர முதல்வர் அவர்கள் திருமலையில் தன் வருகையின்போது திறந்து வைத்தார். இவ்வங்கிக்கான பதிவு மையங்கள் திருமலையில் மத்திய வரவேற்பு அலுவலகத்திலும், கொலுவு மண்டபத்திலும், பி. பி. சி 'க்யூ' கொட்டகைகளிலும் இருக்க, அஸ்வினி மருத்துவ நிலையத்தில் ரத்தசேகரிப்பு பணி மேற்கொள்ளப்படும். திருப்பதியில் தி. தி. தே. மத்திய மருத்துவமனை இவ் இரத்த இருப்பு நிலையமாக விளங்கும்.

**புதிய கல்யாண கட்டா :**

திருமலைக்கு வரும் யாத்திரிகர்களில் பலர் தங்கள் தலைமுடியினைத் திருமலையானுக்குத் தரும்'வேண்டுதல் வழிபாடு' மிகவும் பிரசித்தமானது. இவ்வகையில் இவ்வேண்டுதலை முடிக்க வரும் யாத்திரிகர்களின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டு வருவதால், தற்போது உள்ள கல்யாண கட்டாக்கள் இரண்டும் போதவில்லை. ஆகையால், திருமலை மத்திய உணவுக் கட்டிடத் தொகுதிக்கு எதிரில் ரூ. 30 இலட்ச செலவில் கட்டப்பட்ட பல வசதிகளைக் கொண்ட மூன்று தளங்களைக் கொண்ட நவீன கல்யாண கட்டா ஒன்றினை, முதல்வர் அவர்கள் திறந்து வைத்தார்.

**நவீன 'க்யூ' கட்டிடத் தொகுதி :**

தினந்தோறும் திருமலைக்கு சுமார் 20,000 யாத்திரிகப் பொதுமக்கள் வருகை புரிகின்றனர். விழா நாட்களில் இவ் எண்ணிக்கை 50,000யும் தாண்டும். இவர்கள் எல்லோரையும் பி. பி. சி. 'க்யூ' கொட்டகைகளில் காத்திருக்கச் செய்ய முடியாது. ஆகவே இதனை மனதிற் கொண்டு, ரூ. 3 கோடி செலவில் எல்லா வசதிகளையும் கொண்ட அரை வட்ட அமைப்பில் மூன்று தளங்களைக் கொண்ட சுமார் 16,500 யாத்திரிகர்களுக்கு இடமளிக்கும் வகையில் நவீன 'க்யூ' கட்டிடத் தொகுதி ஒன்று அண்மையில் கட்டி முடிக்கப்பட்டு, அக்கட்டிடம் தற்போது முதல்வர் அவர்களால் திறந்து வைக்கப்பட்டுள்ளது.

**ஸ்ரீ வேங்கடேஸ்வர நித்ய அன்னதான திட்டம் :**

திருமலைக்கு வரும் ஏழை யாத்திரிகர்களுக்கு இலவசமாக உணவளிக்கும் வகையில திட்டம் ஒன்று தேவஸ்தான மேலாண்மையால் மேற்கொள்ளப்பட்டுள்ளது. இத்

திட்டத்தின் கீழ், ரூ.10,00,000/-ஐ நன்கொடையாகத் தந்தால், மேலாண்மையும் அதே தொகையினை இட்டு, மொத்த தொகையினால் வரும் வட்டி தொகையைக் கொண்டு, இலவசமாக நாள் ஒன்றிற்கு, நன்கொடையாளர்களின் பெயரில் 500 நபர்களுக்கு திருமலையில் உணவு வழங்கப்படும்; நன்கொடையாளரும் அவருடைய குடும்பத்தாரும் இலவசமாக வருடத்தில் மூன்று நாட்கள் திருமலையில் தங்கி தரிசனமும் பெறலாம். அண்மையில் இத்திட்டத்தினை முதல்வர் அவர்கள் திருமலையில் துவக்கி வைத்தார்.

**ஸ்ரீ பாலாஜி உடல் ஊனமுற்றோர் நல கட்டிடத் தொகுதி :**

உடல் ஊனமுற்றோர் நலவாழ்விற்காக ரூ. 1 கோடி செலவில் கட்டப்படவிருக்கும் ஸ்ரீ பாலாஜி உடல் ஊனமுற்றோர் நல கட்டிடத் தொகுதி ஒன்றிற்கு ஆந்திர மாநில முதல்வர் தன் திருப்பதி வருகையின் போது அடிக்கல் நாட்டினார். 100 ஏக்கர் நிலப் பரப்பில் கட்டப்படவிருக்கும் இக்கட்டிடத்தில் உடல் ஊனமுற்றோர்க்கான அறுவை சிகிச்சை அரங்கு, பயிற்சி முகாம், புற நோயாளிகள் பரிசோதனைப் பகுதி, கைகால் ஊனமுற்றோர் தாங்களே சம்பாதித்துக் கொள்ளும் வகையில் தொழில் கற்றுத் தரும் பயிற்சி நிலையம், செவிடர், குருடர் மருத்துவப் பகுதி, மனநிலை பாதிக்கப்பட்டோர் சிகிச்சை மையம் ஆகியன பல இடம்பெறும்.

ஃ ஃ ஃ

**மேல் நாட்டு இந்தியக் கோயில்களுக்கு நன்கொடை:**

மேல் நாடுகளில் உள்ள இந்தியக் கோயில்களின் இந்து சமய வளர்ச்சிப் பணிகளுக்காகத் திருமலை திருப்பதி தேவஸ்தானம் ரூ. 12.26 இலட்சம் ஒதுக்கியுள்ளது. அமெரிக்காவில் உள்ள லாஸ் ஏஞ்சல்ஸ் இந்துக் கோயில் குழுக்காக வழங்கப்பட்ட ரூ. 5 இலட்சமும், சான்ஃப்ரான்ஸிஸ்கோ இந்துக் கோயில் குழுக்காகக் கொடுக்கப்பட்ட ரூ. 1.26 இலட்சமும், ஆஸ்திரேலியாவில் உள்ள சிட்னி ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோவிலுக்காக வழங்கப்பட்ட ரூ. 6 இலட்சமும் மேற் குறிப்பிட்ட தொகையில் அடங்கும்.



அண்மையில் திருமலைக்கு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ ஜயேந்திரசரஸ்வதி சுவாமிகள் வருகைபுரிந்தபோது.

**வரவு செலவு:**

1985-86-ம் ஆண்டுக்காக தயார் செய்யப்பட்ட வரவு செலவு கணக்கின்படி, தி. தி. தேவஸ்தானத்தின் வரவு ரூ. 46.76 கோடியாகவும் செலவு ரூ. 39.58 கோடியாகவும் இருக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

**16-வது திருப்படித் திருவிழா :**

வட ஆற்காடு மாவட்டம் ஆற்காடு திருப்பதி-திருமலை படிவிழா சங்கத்தினரால் ஒவ்வொரு ஆண்டும் நடைபெற்று வரும் திருப்படித் திருவிழா இவ்வாண்டும் 16-வது திருவிழாவாக 12-4-85 அன்று வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. இது சம்பந்தமாக திருப்பதி தி. தி. தே. ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் ஏற்பாடு செய்யப்பட்ட விழாவில் தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து வந்த பஜனைக் குழுவினரின் சமய நிகழ்ச்சிகள் நடைபெற்றன. இதுபோது தி.தி.தே. செயலாட்சித் தலைவர் திரு. எஸ். லக்ஷ்மிநாராயணா அவர்களும், இந்து தர்ம ரக்ஷணா சமஸ்தா செயலர் திரு. எஸ். லக்ஷ்மணய்ய நாயுடு அவர்களும் பங்கேற்று உரையாற்றினர். பின்னர், 13-4-85 அன்று, தி. தி. தே. செயலாட்சித் தலைவர் தலைமையில், படிவிழா ஊர்வலம் துவங்கியது. இந்நிகழ்ச்சியில் மயிலை மாமுனிவர் ஸ்ரீ குருஜி சுந்தரராம சுவாமிகள், திருமலை டி. எஸ். அனந்த நாராயண அடிகளார், மற்றும் பல தமிழ்நாட்டு முக்கிய பிரமுகர்கள் பங்கேற்றனர். திருப்பதி மலையடிவாரத்திலிருந்து திருமலை வரை சென்ற இந்தப் படிவிழா ஊர்வலத்தில் சுமார் 95 பஜனைக் குழுவினர் பங்கேற்றனர். இதுபோது, ஒவ்வொரு திருப்படிக்கும் பெண்கள் மஞ்சள் வைத்து கற்பூரம் ஏற்றி தேங்காய் உடைததுத்திருப்படிகளுக்கு பூஜை செய்த காட்சிகள், பக்தர்களின் கண்களுக்கு ஒரு சமய விருந்தாக விளங்கியது. இப்படிவிழா நிகழ்ச்சிகள் யாவும் ஆற்காடு திரு. அ. செ. நரசிம்மன் அவர்களின் மேற்பார்வையில் நடைபெற்றன.

# பண்டைய தமிழில் திருமாலின் திருநாமங்கள் சில....

அரி
அரிமால்
அரி துயிலமர்ந்த மூர்த்தி
அரவணைச் செல்வன்
அருந்தமன்
அனந்த சயனன்
அலகை முலையோடாவியருந்தி னோன்
அலகை முலையுண்டோன்
அலப்படை கொண்டோன் ,
அலாயுதன்
அச்சுதன்
அநந்தன்
அனந்தன்
அறிதுயிலமர்ந்தோன்
ஆதி
ஆதிவராகன்
ஆயன்
ஆயிரம் பெயரோன்
ஆழ் கடற்றுயின்றோன்.
இரேவதி கொழுநன்
இருடிகேசன்
உந்தி பூத்தோன்
உவண முயர்ந்தோன்
உவணவூர்தி
உவணகேதனன்
உலகமுண்டோன்
உலகினையளந்தோன்
உலகளந்தருள்வோன்
உலகுண்டபெம்மான்
உரோகணி தநயன்
ஓர் குண்டலன்
கண்ணன்
கமலக் கண்ணன்
கடல் வண்ணன்
கருங்கடல் வண்ணன்
கரியோன்
கரியவன்
கருணாகரன்
கற்கி
கருத்துகிலுடையன்
காகுத்தன்
காமபாலன்
காளிந்திமர்த்தனன்
காவற் கடவுள்
கார்க மலைக்கு உரியவன்
குறளன்
குண்டலன்
கேசவன்
கொண்டல் வண்ணன்
கோவிந்தன்
சக்கராயுதன்
சங்கமேந்தி
சனார்த்தனன்
சலசலோசனன்
சலசவிலோசனன்
சாரங்கபாணி
சிதரன்
சௌரி
தசவவதாரன்
தாமோதரன்
திருமகன்
திரிவிக்கிரமன்
திருமால்
திருமகள் கொழுநன்
துளப மௌலியன்
துழாய் மௌலி
தேவகி மைந்தன்
நந்த கோபாலன்
நந்த கோபன் மகன்
நாராயணன்
நாரசிங்கன்
நாரணன்
நீலாம்பரன்
நெடுமால்
நெடியோன்
நேமி
பஞ்சாயுதன்
பஞ்சவர்க்குத்தூதன்
படியிடந்தோன்
படி முழு திடந்தோ
பகவன்
பகையூர் வாகனன்
பதுமநாபன்
பரந்தாமன்
பலதேவன்
பலபத்திரன்
பனந்தாமன்
பனத்துசன்
பிரமன் தந்தை
பின்னை கேள்வன்
பிரமனைப் பெற்ற தாதை
பீதாம்பரன்
புணரியிற்றுயின்றோன்
பூமி கொழுநன்
பூவை வண்ணன்
பெருமான்
மதுசூதனன்
மால்
மாயன்
மாயோன்
மாயவன்
மாதவன்
முசலி
முகுந்தன்
முராரி
முன்னோன்
மூண்டகாசனை கேள்வன்
வரன்
வரியுரகன்
வரைபெடுத்தோன்
வனமாலி
வலவன்
வராகவ
வாசுதேவன்
வாமனன்
விண்டு
விறலரி
வெள்ளை
வேலையிற்றுயின்றோன்
வைகுந்த நாதன்......

இப்படி இன்னும் பல உள.

தொகுப்பு: கமலவேணி தனபதி



## மதிப்புரைகள்

# ஸ்ரீ வைஷ்ணவ மலர்கள்

[ஆசிரியர்: தி. ந. ச. இரா. ஸ்ரீநிவாசதேசிகன் வெளியீடு: ஆர். ஸ்ரீநிவாச தேசிகன், 106, தரப்பாளை யத் தெரு, விழுப்புரம் - 605 602 பக்கம் XVI+335 விலை ரு. 12.]

இந்தப் பக்திப்பனுவல் பிராட்டி, எம்பெருமான் நாமாவளிகள், நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத் திரட்டு, தொகுப்பு, தேசிகப் பிரபந்தத் திரட்டு தொகுப்பு, கட்டுரைகள், கவிதைகள் அடங்கியது. ஸ்ரீரங்கம் பெரியாச்ரமம் ஸ்ரீமதாண்டவன் அநுக்ரக ஸ்ரீமுகமத்தால் அலங்கரிக்கப் பெற்றது. இதில் ஐந்து மலர்கள் அடங்கியுள்ளன. முதல் மலர்: கோல மலர்ப்பாவையின் திருநாமங்கள்; இரண்டாவது மலர்: நாலாயிரம், தேசிகப் பிரபந்தம் இவற்றிலிருந்து தேர்ந்தெடுக்கப் பெற்ற மணிகள்; மலர் மூன்று: மயர்வறமதி நலம் அருளப் பெற்ற ஆழ்வார் பெரு மக்களின் திவ்விய வரலாற்று விபரங்கள்; நான்காவது மலர்; சில திவ்விய தேசத்தைப் பற்றிய கட்டுரைகள் மூன்றும் வெவ்வேறு தலைப்புகள் கொண்ட கட்டுரைகள் ஐந்தும் அடங்கியவை; ஐந்தாவது மலர்; உரைநடை புதுக் கவிதை கோலங்கொண்டுள்ளது.

இந்தப் பக்திப்பனுவல் ஆசிரியரின் பக்திப் பெருக்கில் முகிழ்த்தது. பக்தியுடன் இதனை அணுகுவார்க்கு முக்திக்கு வழிகாட்டக் கூடியது. "உளங்கனிந்திருக்கும் அடியவர் தங்கள் உள்ளத்து ஊறிய தேனைக்" இனிக்கக் கூடியது. இந்த அரிய நூல் திருமலை திருப்பதி தேவஸ்தான நிதி உதவியுடன் வெளி வந்துள்ளது.

நூல் நன்றாகப் பதிப்பிக்கப் பெறவில்லை. எடுத்துக் காட்டாக மலர் 2இல் உள்ள பாசுரங்கள் உருவம் சிதைந்த வண்ணம் காணப் பெறுவது அருவருப்பைத் தருகின்றது. ஆறு சீர் பாசுரங்களை மூன்று மூன்றாக மடித்தும், எட்டு சீர்ப்பாசுரங்களை நான்கு நான்காமடித்தும் போட்டிருந்தால் பாட்டின் உருவம் பாங்குடன் அமைந்து பார்ப்பவர்களின் கருத்தைக் கவரும். எம்பெருமான் பிரசாதமாகிய இலட்டு உருக்குலைந்தாலும் சுவை குன்றுதல்லவா? அது போல் பாசுரங்களின் உருவம் சிதைந்தாலும் பனுவலின் சுவை குன்றுது. சில அச்சுப் பிழைகள் நேர்ந்துள்ளன. அடுத்த பதிப்பில் இக் குறைகள் களையப் பெற்றால் நலம். இந்நூல் பக்தர்கட்கு அரிய விருந்து; பொது மக்களுக்கு எம்பெருமானின் பிரசாதம். இதனை வெளியிட்ட ஆசிரியர் பாராட்டுதலுக்கு உரியவராகின்றார்.

பேராசிரியர் டாக்டர். ந. சுப்பு ரெட்டியார்.

# கண்ணன் தீராத விளையாட்டுப் பிள்ளை

கண்ணன் தீராத விளையாட்டுப் பிள்ளை (பூதனையின் புனித முடிவு); ஆசிரியர்: ஸ்ரீ தாஸ்; சீதாச்ரமம், கும்பகோணம்; 1975; பக்கங்கள்: I-VI, 1-27; விலை: ரு. 2-00.

'கண்ணன்' என்னும் சொல்லைக் கேட்டவுடன் நம் மனதில் தோன்றுவது ஆலிலைமேல் துயின்று,சிறு நகை பூத்து லீலா விநோதங்கள் பல புரிந்த கண்ணனின் வடிவழகுதான். அந்த வடிவழகிற்கு அழகூட்டுபவை கண்ணனின் கண்களே என்று கருத்தில் கொண்டு கண்களின் அழகினாலேயே அப்பெயர் என ஆசிரியர் விளக்கம் கூறுவது மிகவும் பொருத்தமே.

சிறிய புத்தகமேயாயினும், கண்ணனின் பிறப்பு வரலாற்றைச் சுருக்கமாகக் கூறி, பூதனையின் புனித முடிவைக் கூறும் இப்புத்தகம் இந்நூலாசிரியரின் சொல் வன்மையால் சிறந்து ஒளிருகிறது.

கண்ணனால் தனக்கு ஏற்படவிருக்கும் முடிவை எண்ணி அஞ்சிய கம்ஸன் கண்ணனைக் கொல்ல பூதனை என்னும் கொடிய அரக்கியை ஏவியது நமக்குத் தெரியும். மல்லிகை மலர் சூடிய கூந்தலும், பருத்த துடைகளும், மெல்லிய இடையும், அழகிய உடையும், காதில் அசைந்தாடும் அணிகலனால் ஒளிரும் கூந்தல் நிறைந்த முகமும் கொண்டு காண்பவர் மனத்தைக் கவரும் என்று பொருள் தரும் பாகவதச் செய்யுள் அவளழகை விவரிக்கத் தொடங்குகிறது. மேலும் அவ்வடிவழகில் பூதனையைக் கண்ட கோபியர் தன் கணவனைக் காண இலக்குமியே வந்தனள் என்று எண்ணினராம்.

குழந்தைகளைக் கொல்பவளும், அவர்களின் இரத்தத்தைக் குடிப்பவளுமான பூதனை கண்ணனைக் கொல்லும் தீய எண்ணத்துடன் தன் முலைப் பாலைக் கொடுத்த போதும், கண்ணனின் வடிவழகைப் பற்றி கோபியர் கூறக் கேட்டு தன் மனம் அவன் பால் ஈர்க்கப்பட்ட பூதனை கண்ணனையே எண்ணிக்கொண்டு அவனைத் தூக்கி மடியிலிடவும் பால் தானே சுரந்தது என ஆசிரியர் கூறுகிறார். தனக்கு பால் ஈன்ற அன்னை என்னும் எண்ணத்தினால் பூதனைக்கு பிறப்பு இறப்பு என்னும் பிணைப்பினின்றும் விடுதலை தந்தான் கண்ணன் என்று பாகவதம் கூறுகிறது.

தன்னை எப்பொழுதும் நினைப்பவரின் துயரைத் துடைத்து நற்பேறு நல்கும் கண்ணனின் இந்த லீலா விநோதத்தைக் கூறும் இப்புத்தகம் பக்தர்களின் பக்தியைப் பெருக்க ஒரு நன்னூலாகும்.

ந. கங்காதரன்.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501



# ஸப்தகிரி

விலை ரூ. 1/-

ஜூலை, 1985

திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்